Canada C$ 3.00 / US $2.50 / UK & Europe £ 2.00

அறிவு, ஆற்றல், அனுபவம், ஆக்கம்
ஆகியவற்றைக் குவியம் ஒன்றாகக் குவிக்கும்

# குவியம்

முதுவேனில் 2005



# Kuviyam

FALL 2005

Kuviyam brings to focus knowledge, skills, experience and creativity

# மனித இனமும் அணு ஆயுதமும்

மனித இனம், கடந்த பல தசாப்தங்களில் உலகில் நடந்த உயிர் இழப்புகளுக்கு காரணமாக இருந்த சம்பவங்களை மனதில் மீட்டுப் பார்க்கும் போது வெட்கித் தலைகுனிய வேண்டிய நிலையில் உள்ளது. முதலாம் இரண்டாம் உலக யுத்தங்கள், அதோடு தொடர்பான அழிவுகள், அதன் பின்னர் பயங்கரவாதம், சர்வாதிகாரம் , ஜனநாயகம், புரட்சிகள் என்ற போர்வையில் புதிய பரிணாமத்தில் பல நாடுகளில் தொடரும் தாக்குதல்கள், அதனால் இறக்கும் ஒன்றும் அறியாத அப்பாவி மக்கள், இப்படி தொடருகிறது வன்முறைகள், நாட்டின் சொத்துக்களின் அழிவுகள்.

1945ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 6ம் திகதி காலை 8.15 மணிக்கு ஜப்பானில் உள்ள ஹிரோஷிமா நகரத்தின்மேல் அமெரிக்கர்கள் போட்ட அணுகுண்டு சுமார் 68,000 உயிர்களை சில வினாடிகளில் பொசுக்கி அழித்தது மட்டுமன்றி 70,000 மக்கள் கதிர்வீச்சினால் படுகாயமடைந்தனர். 12 அமெரிக்கர்கள் என்னோலா கே (Enola Gay) என்ற விமானம் மூலம் இத் தாக்குதலை நடாத்தி இருக்கிறார்கள். அதோடு மட்டும் தாக்குதல் நின்று விடவில்லை. ஆகஸ்ட் 9ம் திகதி அணுக்குண்டை விட சக்திவாய்ந்த புளூட்டோனியம் குண்டு நாகசாக்கி நகரத்தின் மேல் போடப்பட்டு சுமார் 38,000 மக்கள் இறந்தனர். 35,000 மக்களுக்கு மேல் படுகாயமடைந்து பின்னர் இறந்தனர். இத்தாக்குதல்களால் ஏற்பட்ட கோரமான வடுக்களுடன் இன்றும் ஜப்பானில் மனிதர்கள் வாழ்கிறார்கள். தமது அனுபவங்களை ஊடகங்களுக்கு எடுத்தும் சொல்லியிருக்கிறார்கள். தமக்கும் அதே நிலை என்றாவது ஒருநாள் ஏற்படலாம் என்று சிந்திக்காமல் மனித இனம் வாழ்கிறது. இவ்வருடம் அச்சம்பவம் நடந்து 60 ஆண்டுகளாகியும் பலர் மனதில் அதன் தாக்கம் மறைந்துவிடவில்லை. இரண்டாம் உலகப் போருக்கு அது முற்றுப்புள்ளி வைத்தாலும் ஒரு புது அத்தியாயத்தை அச்சம்பவம் ஆரம்பித்து வைத்திருக்கிறது. அதே சமயம் இப்பொழுது அமெரிக்காவும் ஜப்பானும் கைகுலுக்கி நட்பு கொண்டாடுவதை பலர் அறிந்ததே. பணம் பத்தும் செய்யும் என்பது உண்மை. இதே கைகுலுக்கலை அணுகுண்டைப் போடுமுன்னர் செய்திருந்தால் அவ்வளவு மரணங்களும் அழிவுகளும் எற்பட்டிருக்குமா என்பது பலர் மனதில் தோன்றும் கேள்விக் குறியாகும். அணுவாயுதங்களின் மகிமையை அறிந்த பல நாடுகள் அதனை நாடிச் சென்றனர். அதில் 1949 ஆண்டு சோவியத் யூனியன் உலகில் அணுவாயுதத்தை கொண்ட இரண்டாம் நாடாக தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்டது. யார் பலம் வாய்ந்த அணுவாயுதத்தை வைத்திருப்பது என்ற போட்டி தொடர்ந்தது. அதோடு நின்று விடவில்லை கதை. 1951ல் பிரித்தானியாவும் அணுக்குழுக்களுடன் மூன்றாவது நாடாக சேர்ந்தது. இன்று மட்டும் பிரான்ஸ் இந்தியா, பாக்கிஸ்தான், வட கொரியா, சீனா. இஸ்ரேல் உட்பட 9 நாடுகள் அணுவாயுதங்களை வைத்திருக்கிறது என்றால் உலகம் எவ்வளவு ஆபத்தான நிலையில் இருக்கிறது என்பதை நாம் உணரவேண்டும். லிபியாவும் அதற்கான முயற்சிகளை எடுத்தது ஆனால் கைவிட்டுவிட்டது. ஈரானும் அணுவாயுதத்தை எந்த நேரமும் உருவாக்கலாம் என்ற நிலையும் உருவாகி உள்ளது. மேலும் பல பயங்கரவாதத்தை தழுவி வாழும் நாடுகளும் இக்குழுவில் சேர்ந்தால் உலகின் கதி என்ன? 2001ம் ஆண்டு செப்டம்பர் 11ல் (911) நியூயோர்க் நகரத்தின் மேல் நடந்த விமானத் தாக்குதலின்போது தற்பொழுது உள்ள கைப்பெட்டி அளவான அணுவாயுதம் இருந்திருப்பின் மக்கள் கதி என்னவாகியிருக்கும் என்று சிந்தித்துப் பார்க்கும் போது உடல் சிலிர்க்கிறது.

**இன்று மட்டும் பிரான்ஸ், இந்தியா, பாக்கிஸ்தான், வட கொரியா, சீனா, இஸ்ரேல் உட்பட 9 நாடுகள் அணுவாயுதங்களை வைத்திருக்கிறது என்றால் உலகம் எவ்வளவு ஆபத்தான நிலையில் இருக்கிறது என்பதை நாம் உணரவேண்டும்.**

ஹிட்லர் , முசோலினி , இடி அமீன் , சதாம் ஹுசெயின் போன்ற சர்வாதிகாரிகளின் ஆட்சியில் அணுவணுவாக சித்திரவதை செய்யப்பட்டு இறந்தவர்களும், இராணுவ

தாக்குதல்களால் இறந்தவர்களும் ஏராளம். தனது ஆட்சியை தொடர்ந்து நிலைநாட்ட அந்த முறையே சிறந்த முறையென மக்களால் தேர்ந்தெடுக்கப்படாத அவர்கள் கருதியிருக்கலாம். ஆனால் மக்களால் ஜனநாயகம் என்ற போர்வையில் வாக்களிப்பு மூலம் தெரிவுசெய்யப்பட்ட அரசாங்கம் தனது பாரபட்சமான அடக்கு முறைகளை பெரும்பான்மையினத்தினரை திருப்திப்படுத்த சிறுபான்மையினத்தினர் மேல் தொடர்ந்து நடத்துவதற்காக, தனது படைகளைப் பாவித்து தாக்குதல்களை நடாத்தி உயிர்களையும் நாட்டின் சொத்துக்களையும் அழித்து வருவதை ஸ்ரீலங்கா, இஸ்ரேல், சிம்பாப்வே, மற்றும் பல ஆபிரிக்க நாடுகளில் நாம் காணக்கூடியதாக இருக்கிறது.

2004ம் ஆண்டு டிசம்பர் 26ம் திகதி தோன்றிய இயற்கையின் சுனாமி பேரலையினால் 11 நாடுகளில் ஏற்பட்ட அழிவுகளை உயிர் இழந்த மக்களையும் நினைத்து அணுவாயுதங்களை வைத்திருக்கும் நாடுகள் கண்ணீர் விட்டு, உதவிக் கரம் கொடுத்தது வேடிக்கையான விடயம். இது பசுத் தோல் போர்த்த செயலா எனவும் எண்ணத் தோன்றுகிறது. சந்தர்ப்பம் வந்தால் சுனாமியினால் ஏற்பட்ட அழிவை விட பேரழிவுகளைத் தம்மால் உருவாக்க முடியும் என்பது அவர்களுக்குத் தெரியும். வியட்நாம், ஈராக், ஆப்கானிஸ்தான் யுத்தங்கள் இதற்கு எடுத்துக்காட்டு. அதனால் எற்பட்ட அழிவுகள் நின்று விடவில்லை. தொடர்கிறது. அது மட்டுமல்ல இத்தாலி, ஸ்பெயின், பிரித்தானியா, இந்தோனேசியா நாடுகளுக்கும் குண்டுத்தாக்குதல்கள் என்ற உருவத்தில் பரவிவருகிறது. இது முடிவில்லாத தொடர்கதை.

மனிதன் தனது உரிமைகளை இழந்து இரண்டாம் தர இனமாக வாழும் போது அவனுள் தூங்கிக் கிடக்கும் வன்முறை என்ற மிருகம் விழித்தெழுகிறது. “அடி மேல் அடி அடித்தால் அம்மியும் நகரும்” என்பார்கள். அது மனிதனுக்கு பொருந்தும். இதற்கு உதாரணம் ஈழத்து தமிழ் இனமும் பாலஸ்தீனிய மக்களுமாகும். அதைத் தூண்டி விடுபவர்கள் அதனால் ஏற்படும் விளைவுகளைச் சிந்தித்து மனித உரிமைகளை மதிக்க நடவடிக்கைகள் எடுப்பது அவசியம். தன் நாடு, தன் நாட்டு மக்கள் , தன் மதம் , தன் இனம், தனது பதவி என்ற போக்கு மாறினால் தான் உலகம் மேலும் ஆணுவாயுத தாக்குதல் என்ற பீதியில் இருந்து விலகலாம். இல்லையேல் கலியுகம் முற்ற உலகம் என்னகதியை அடைகிறதோ தெரியாது. சமாதானம் என்ற சந்தர்ப்பங்கள் பல தடவை வரப்போவதில்லை. அதை நழுவ விட்டு மனித உரிமை மீறல்களை தொடர்ந்தால் தலையில் மண்ணைவாரிக் கொட்டும் நிலைதான் எந்த நாட்டுக்கும்.

கட்டுரை

# துலா

பொன் குலேந்திரன்

யாழ்ப்பாணக் குடா நாட்டில் யுத்தம் ஆரம்பிக்கு முன் பல கிராமங்களில் பச்சைப் பசேல் எனத் தோற்றமளித்த புகையிலை, வாழை, வெங்காயம் போன்ற, மரக்கறித் தோட்டங்களை நாம் மறக்க முடியாது. யாழ்ப்பாணம் - பருத்தித்துறை வீதி, யாழ்ப்பாணம் - காங்கேசன்துறை வீதி யாழ்ப்பாணம் - பலாலி வீதிகளின் இருமருங்கும் இப்பசுந் தோட்டங்கள் ஒரே கண்கொள்ளாக்காட்சி. இவை யாழ் விவசாயிகளின் கடும் உழைப்பின் சின்னம். ஆனால் இன்றோ யுத்தத்தினால் இவை பாழடைந்து பற்றைக் காடுகளாகத் தோற்றமளிக்கின்றன. பல ஆயிரம் ஏக்கர் காணிகள் உயர் பாதுகாப்பு வலையம் என்ற பெயரில் சுவீகரிக்கப்பட்டுவிட்டன. அக்காலத்தில், அத்தோட்ங்களுக்கு மத்தியில், பறவைகளையும், மிருகங்களையும் பயிர்களைத் தாக்காது வெருட்டுமுகமாக, பானைகளைத் தலைகளாகக் கொண்ட வெருளிகளைக் காணலாம். இவை பெரிதும் சிறிதுமாக பல உருவங்களைக் கொண்டவை. அதைக் கண்ணுற்றோ என்னவோ “கத்தரித் தோட்டத்து வெருளி” என்று நவாலியூர் சோமசுந்தரப் புலவரின் கவிதை உருவாகியது போலும்.

நதிகளும் சிற்றாறுகளும் ஓடாத யாழ் குடா நாடு இவ்வளவுக்கு விவசாயத்தில் அக்காலத்தில் முன்னணியில் திகழ நன்னீர் கிணறுகளே முக்கிய காரணமாகும். மழை குறைவானபடியால் விவசாயிகள் கிணற்று நீரையே நம்பித் தமது பயிர்களை வளர்த்தனர். உரத்துக்காக வேலிகளில் வளரும் பூவரசம் மரத்தின் குழைகளையே பாவித்தனர். கடும் உழைப்பை நம்பி வாழ்ந்த விவசாயிகளுக்கு கற்பகத்தரு போன்றது தோட்டங்களின் மத்தியில் உள்ள நன்னீர் கிணறுகள். கிணறுகள் மட்டும் இருந்தால் போதுமா?. தொழில் நுட்பம் விருத்தியடைந்து தண்ணீர் இறைப்பு இயந்திரமும் மின்சாரமும் வருவதற்கு முன்பாக அவர்கள் நெம்புகோல் (lever) பௌதிக தத்துவத்தில் இயங்கும் **“துலா”** என்ற அமைப்பையே தண்ணீர் இறைப்புக்குப் பாவித்தனர். கிணற்றின் உள்ளே இருக்கும் நீரை வெளியே தூக்கி விடுவதால் துலா என்ற பெயர் அவ்வமைப்புக்கு வந்திருக்கலாம்.

**சாதூப் (Shaduf) என்ற எகிப்திய துலா அமைப்பு**

துலா அமைப்பு 4000 வருடங்களுக்கு முன்பே எகிப்து தேசத்தில் நைல் நதிக் கரை ஓரத்தில் வாழ்ந்த விவசாயிகளால் சாதுாப் (Shaduf) என்ற பெயரில் பாவிக்கப்பட்டது. எகிப்திய நாகரீகத்திற்கும் திராவிட நாகரீகத்திற்கும் முற்காலத்தில்

தொடர்பிருந்ததற்கு ஆதாரங்கள் உண்டு. ஆகவே இவ்வமைப்பு வணிகர்களால் தமிழ் நாட்டுக்கு அறிமுகப்படுத்தப்பட்டிருக்கலாம். காலப் போக்கில் ஈழத்திரு நாட்டிலும் பாவனைக்கு வந்திருக்கலாம். இவ்வமைப்பின்றி கிணற்றில் இருந்து நீர் அள்ளி வாய்க்கால் வழியாக பயிர்களுக்கு இறைப்பது என்பது மிகவும் கடினமான செயலாகும். வெளிவரும் தண்ணீரின் கனவளவு கூட குறைந்தளவாகவே இருக்கும். வேலைப் பழு, இலகுவான செயல்பாடு, வெய்யில் தலைக்கு வரு முன் குறைந்த நேரத்தில் தண்ணீர் இறைப்பு ஆகியவற்றை கவனத்தில் எடுத்து உருவாக்கப் பட்டதே துலா. எகிப்திய துலாவுக்கும் யாழ் குடா நாட்டுத் துலாவுக்கும் அனேக வேறுபாடுகள் உண்டு.

எகிப்து நாட்டில் பல ஆயிரம் ஆண்டுகளாகப் பாவிக்கப்பட்டு வரும் சாதுாப் என்ற துலா போன்ற அமைப்பு, நைல்நதி, கிணறுகளில் இருந்து நீரினை நில மட்டத்துக்கு கொண்டு வரப் பாவிக்கப்பட்டது. எகிப்திய பிரமிட்டை கட்டுவதற்கு பெரும் கற்களை மேலே கொண்டு செல்லவும் இவ்வமைப்பில் சிறு மாற்றங்கள் செய்து பாவிக்கப்பட்டதெனை ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள். நிலத்தில் இருந்து 8 அல்லது 10 அடி உயரத்தில் நீண்ட, உருண்டை வடிவமான மரத்தண்டினைக் கொண்டது சாதுாப். அதன் நடுவே உள்ள துளையினூடக செல்லும் மரக் கோல் ஒன்று அச்சாக இயங்குகிறது. நீண்ட மரத்தண்டின் அடிப்பகுதி பெருத்தும் பாரமான கற்கள் இணைக்கப் பட்டும் இருக்கும். மேற்பகுதி மெல்லியதாக இருக்கும். இப்பகுதியில கட்டப்பட்ட நீண்ட கயிற்றின் மறுமுனையில் தண்ணீர் அள்ளுவதற்கான பாத்திரம் இணைக்கப்பட்டிருக்கும். அடித் தண்டில் பாரம் கூடுதலாக இருப்பதினால் பாத்திரத்த்தைச் சிறுசிரமத்துடன் கிணற்றுக்குள் இறக்க முடிகிறது. தண்ணீரை பாத்திரத்தினுள் அள்ளிய பின் இலகுவாக மேலே கொண்டு வர பாரமான அடித்தண்டு உதவுகிறது. இதன் நிறை பாத்திரத்தினுள் உள்ள நீரின் நிறையிலும் பார்க்க அதிகமாக இருப்பது அவசியம். இந்த அமைப்பு அலக்ஸாந்திரியாவில் கல்வி பயின்ற ஆர்கிமிடிஸ் போன்ற விஞ்ஞானிகளால் அறிமுகப்படுத்தப்பட்டு காலப் போக்கில் மாற்றங்கள் அடைந்திருக்கலாம்.



### சோழமண்டலமும் துலாவும்

சோழர் மண்டலத்தில் Andi எனப்படும் நீர்பாசன முறை இருந்து வந்ததாக வரலாறு கூறுகிறது. எகிப்திய நாட்டில் இருந்து சோழ்நாட்டுக்கு வந்த வியாபாரிகள் துலா முறையை அறிமுகப்படுத்தியிருக்கலாம். பின்னர் யாழ்குடா நாடு சோழரின் ஆட்சிக்கு கீழ் வந்தபோது அங்கு அறிமுகப்படுத்தப்பட்டிருக்கலாம். யாழ்குடாநாட்டின் மண், பருவநிலை புகையிலை வளர்ச்சிக்கும் காய்கறிகள் உற்பத்திக்கும் உகந்தது. இப்பயிர்களின் உற்பத்திக்கு நெற்பயிரைப்போல் அல்லாது சிறிதளவு நீரே தேவைப்படுவதால் குளங்களில் இருந்து நீரைப்பெறாமல் கிணறுகளில் இருந்து துலா முறையைப்பாவித்து நீர்ப்பாசன முறையை கடைப்பிடித்தனர். வடபகுதியில் மட்டும் சுமார் 8000 கிணறுகள் இருப்பதாக கணிப்பு.

### யாழ் குடா நாட்டுத் துலாவின் அமைப்பு

யாழ்குடாநாட்டில் இயங்கும் துலாவுக்கும் எகிப்திய சாதுாப்புக்கும் உருவ அமைப்பில் ஒற்றுமை இருப்பினும் செயல்பாட்டில் வித்தியாசம் உண்டு. பனைமரத்தை இரு பாதிகளாகப் பிளந்து, தச்சனால் செதுக்கப்பட்ட கிட்டத்தட்ட நூற்புக் கதிர் (Spindle) போன்ற தண்டானது அச்சுலக்கையில் (Axle) மேலும் கீழுமாக ஆடும். முழுத்தென்னை மரத்தினாலும் துலா செய்யப் படுவதுண்டு. இருவரோ ஒருவரோ (விவசாயிகள்) தண்ணீரை கிணற்றில் இருந்து கொண்டு வர அத் தண்டின் மேல் நடப்பார்கள். அடித் தண்டில் சாதுாப்பைப் போன்று பாரமான கல்லொன்று கட்டப்பட்டிருக்கும். தண்டில் நடப்பவர்கள் அடித் தண்டில் இருந்து மெல்லிய மேல் தண்டை நோக்கி நடப்பார்கள். அவர்கள் கால்கள் வைத்து நடப்பதற்கு இலகுவாக துலாவின் இரு பக்கங்களிலும் ஏணிப் படிகள் போன்ற படிகள் அமைக்கப் பட்டிருக்கும். இந்த அமைப்பு சாதுாப்பில் இல்லை. துலாவில் நடப்பவர்கள் மேல் நோக்கி நடக்கும் போது, துலாவின் நுனியில் கட்டப்பட்டுள்ள கயிற்றையும் அதன் மறு நுனியில் இணைக்கப்பட்ட, பனை ஓலையினால் பின்னப்பட்ட முக்கோணவடிவமான பெரிய பட்டையையும் இலகுவாக கிணற்றுக்குள் இறைக்க உதவுகிறது.

### துலாவின் உடலாகப் பனைமரம்

யாழ்குடாநாட்டின் கற்பக விருட்சம் பனைமரம். பல பாவனைகளுக்கு அது பாவிக்கப்படுகிறது. அதில் மிக முக்கியமாக துலாவின் உடலாக இயங்குகிறது. வைரமான பனைமரத்தை இரண்டாகப் பிளந்து நன்கு சீவி இரண்டு பாதிகளும் உட்பக்கங்கள் இணையும்படி ஒன்றாக நெம்புகளால் பொருத்தப் படுகின்றன. நெம்புகள் துலாவின் இருபுறமும் 9" அங்குலம் வரையில் நீண்டிருக்கும். நெம்பை பலப்படுத்த இருபுறமும் மர(பனை) ஆணிகளால் தறையப்படும். நெம்பு துலாவை ஒன்று சேர்க்க மட்டுமல்ல நடப்பவர்கள் மிதித்து நடக்கவும் பயன்படுகிறது. இதற்காக நெம்புகள் ஒவ்வொன்றும் 2' அல்லது 3' அடி துாரத்தில் இருக்கும். துலாவிலும் கால் வைத்து நடக்க சிறிய படி போலவும் செதுக்கியிருக்கும். துலாவின் நீளம் கிணற்றின் ஆழத்தைப் பொறுத்து 25 அல்லது 35 அடி வரையில் இருக்கும்.

துலாவின் முன் பக்கம் (கொண்டைத் துலா) மெல்லியதாகவும் அடித்துலா (குண்டித்துலா - பனையின் அடிப்பாகம்) மொத்தமாகவும் இருக்கும். துலாவின் நடுப்பகுதியில் (கூடுதலாக அடித்துலாவை அண்டி) நீள் சதுரத் துளை இட்டு அதன் ஊடாக பனை மரத்தினால் ஆன அச்சுலக்கை இணைக்கப்படும். அச்சுலக்கையின் பருமனிலும் பார்க்க அச்சிற்காக இடும் துளை இறுக்கமாக இருப்பதனால் அச்சு ஆடாமலும் ஓடாமலும் இருக்கும். முதல் முதலாக துலாவை நிறுவும்போது கிணற்றிலிருந்து 2 - 3 அடி தூரத்தில் துலாவின் இரு மருங்கும்முன்பே “ ப “ உருவில் அச்சுக் குத்தியை அடக்கக் கூடியதாக கெவர் வெட்டப்பட்ட பனங் குத்திகளாலான சேத்துக் குத்திகள் இரண்டு நடப்பட்டு அவற்றின்மேல் துலாவுடன்கூடிய அச்சுலக்கை தூக்கி வைக்கப்படும். சேத்துக்குத்திகளின் நேருக்கு முன்னும் பின்னும் பூவரசந் தடிகள் ஓரடிஅல்லது இரண்டடி இடைவெளியில் நடப்படுகின்றன. நீண்ட மரப் பாச்சிகளும இடையிடையே பெலனுக்கு நடப்படுகின்றன. நீண்ட பச்சைப் பூவரசந் தடிகளால் சேத்துக் குத்திகளின் மட்டத்திற்கு மேல் இரண்டடி இடைவெளியில் இரண்டு அல்லது மூன்று வரிச்சுக்கள் கட்டப்படுகிறது. இது துலா மிதிப்பவர்கள் பிடித்துக்கொண்டு நடக்க உறு துணையாயிருக்கும். கொண்டைத்துலாவில் ஈருவாணி (பனம் ஈர்க்கிலினால் அல்லது பனம் நாரினால் பின்னப்பட்டது) கட்டப்படும் இது நழுவி விடாதிருக்க துலாவின் மேற்பகுதியில் நுனியில் கொண்டை வடிவில் ஒரு உருவம் செதுக்கியிருக்கும். ஈருவாணியின் அடிப்பகுதியில் முப்பது கலன் தண்ணீர் கொள்ளக்கூடிய 3 மூலைப் பட்டையைக் கட்டி இறைக்க வேண்டியதுதான் பாக்கி. பட்டையின் கொள் அளவு கூடக.குறையவும் இருகலாம். சாதாரண நார்க் கடகத்தால் இறைப்பதும் உண்டு. இது கிணற்றின. ஆழம் கிணற்றின் நீரூற்றுத் தன்மை ஆகியவற்றில் தங்கியுள்ளது. சிறிய கிணறுகளுக்கு தென்னந்துலா பாவிப்பதும் உண்டு. இவை 25 அடி நீளம் வரையில் தனி தென்னையில் செதுக்கப்பட்டவை. பனை போன்று தென்னை வைரம் இல்லை. துலா மிதிக்க ஒருவர் தான் தேவைப் படுவர்.

### ஆடுகால்கள்

துலாவில் நடப்பவர்கள் இலகுவாக பிடித்துக் கொண்டு நடக்க இரு பக்கங்களிலும் ஆடுகால்கள் எனப்படும் ஆறு அல்லது எட்டு பூவரசு அல்லது ஒதி மரங்கள் வரிசையாக நடப்பட்டிருக்கும். இவற்றில் வரிச்சுப் போன்று பனஞ்சிலாகை அல்லது பூவரசந் தடியினால் கட்டப்பட்டிருக்கும். இது நட்டு வேரூன்றி பெலப்படுமட்டும் பனம் கொட்டினாலான சேத்துக்குத்திகள் இரண்டு நட்டு அதில் துலாவைத் தாங்க “ப “ வடிவில் வெட்டப்பட்டிருக்கும். இவை பேண் மரங்கள் என அழைக்கப்படும். இந்த “ப” துலாவை முன்னுக்கோ பின்னுக்கோ அசைய விடாது. இவ்விரு வரிசைகளுக்கு இடையே இரண்டு மீட்டர்வரை இடைவெளி இருக்கும். இவ் இடைவெளிக்கிடையே அச்சுலக்கையும் துலாவும் இயங்குகிறது. இவ்வாடுகால்களை இணைத்து இருபக்கங்களிலும் மூன்று வரிசைகளாக கட்டப்பட்டிருக்கும் தடிகள், துலாவில் நடப்பவர்கள், பிடித்துக்கொண்டு நடப்பதற்கு உதவுகின்றன. அதுவுமன்றி ஆடுகால்களுக்கு பலத்தையும் கொடுக்கின்றன. சில சமயம் தொடர்ந்து பாவிப்பதினால் அச்சுலக்கை சமச்சீராக இல்லாமல் ஒரு பக்கம் கூடியும் ஒரு பக்கம் குறைந்த நிலையை அடைந்து விடும். அதனால் துலா சரியாக இயங்க முடியாது போகும். அதனை நிவர்த்தி செய்ய துலாவில் நடப்பவர்கள் தமது பின்புறத்தை ஆடுகால் பக்கமாக வைத்து தமது பலத்தை பாவித்து துலாவுடன் பொருத்திய அச்சுலக்கையை சமச் சீர் நிலைக்கு கொண்டு வருவார்கள். இதற்கு துலாவின் அடித் தண்டில் ஒருவர் கீழே நின்ற வாறு சமச்சீர் நிலையைக் கணிக்க உதவுவார். இதனைக் கிணற்றிலிருந்து தண்ணீர் இறைக்க முன் செய்வார்கள். வாளிக்குப் பதிலாக தண்ணீர் அள்ள பனையோலையினால் பின்னப்பட்ட 3 மூலைப்பட்டையை பாவிப்பார்கள். அதன் வெளிப்பகுதி கிணற்றுச் சுவருடன் உராய்ந்து ஓட்டையாகி தண்ணீர்வெளியே ஒழுகாமல் இருக்க தோல் அல்லது றப்பரினால் பாதுகாக்கப்பட்டிருக்கும்.

### தண்ணீர் இறைப்பு

வெய்யிலின் வெப்பம் அதிகரிக்க முன் தண்ணீர் இறைப்பார்கள். அதனால் வீட்டுக் கிணற்றுத் தண்ணீரை இறைத்து சுத்தப் படுத்த வேண்டுமாகில் தண்ணீர் இறைக்கும் தொழிலைச் செய்பவர்களுக்கு ஏற்கனவே முன்னறிவித்தல் கொடுத்தாக வேண்டும். கிணற்றின் அளவை முதல் நாளன்றே வந்து பாத்து எவ்வளவு தண்ணீர் இறைக்க வேண்டும் எவ்வளவு நேரம் செலவாகும் எனக் கணித்து கூலி கேட்பது வழக்கம். தினம் நான்கு அல்லது ஐந்து வீடுகளுக்குச் சென்று கிணறு இறைப்பார்கள். சில சமயம் பின்னேரங்களில், வெய்யில் அடங்கிய பின் தொழில் புரிவார்கள். கடும் உழைப்பாளிகள் அவர்கள். அதனால் திடகாத்திரமான உடலமைப்பினைக் கொண்டவர்கள்.

தோட்டங்களில் பயிர்களுக்குப் பாத்தி வழியே நீர் பாச்சுவது ஒரு தனிக் கலை. செம்மண் வாய்க்கால் வழியே ஓடிப் பயிர்களின் தாகத்தை நன்னீர் தீர்க்க துலா பெரிதும் உதவுகிறது. தண்ணீர் வாய்கால் வழியே போகும் போது அதன் திசையை மாற்றி வேறு பகுதிகளில் உள்ள பயிர்களுக்கு விடுவதை தண்ணி மாற்றல் என்பார்கள். இதனால் பல காணிப் பிரச்சனைகள் உருவாவதுமுண்டு. தவறிப் போய் பக்கத்துக் காணிக்குள் தண்ணீர் சென்று விட்டால் தர்க்கத்தில் போய் முடிவதுண்டு. எல்லைக் கற்கள் காணி எல்லைகளை நிர்ணயிக்கும்.

### ஒரு துலாக் கதை

நிலாக் காலங்களில் இறைப்புக்காரர்கள் சாமத்தில புறப்பட்டு விடுவர். ஒவ்வொருவரையும் மற்றவர் கூக்காட்டி

அழைப்பர். அநேகமாக நாலுபேர் இறைப்புக்குத் தேவைப் படுவர். இப்போது போலல்லாமல் முன்பு பேய்களின் தொல்லையும் கூடுதலாயிருந்தது. முதல் நாள் இறைப்புக்கு ஒழுங்கு செய்ததை பேய் ஒட்டுக் கேட்டுவிட்டு விடியலில் இறைப்புக்காரர் கூக்காட்டுவது போன்று சுப்பையாவை கூக்காட்டிக் கூப்பிட்டது. பின்பு சுப்பையா பின்னேவர அவரைவிட வேகமாக நடந்தது பேய். கந்தையா இப்படி நடப்பதில்லை இதில் ஏதோ சூது இருக்கிறதென்று எண்ணிய சுப்பையா திரும்பி வீட்டுப் 'பக்கம்' நடந்தார். பயத்தினால் மாரடைப்பு ஏற்பட்டு ஸ்தலத்திலேயே இரத்த வாந்தி எடுத்து இறந்துவிட்டார். அடுத்த நாள் ஊரெல்லாம் சுப்பையா பேயடித்து இறந்து விட்டதாகக் கதை. உண்மையில் நடந்தது: சுப்பையா கனவொன்று கண்டு விளித்துக்கொண்டார். கனவில் கந்தையா தன்னைக் கூக்காட்டி இறைப்புக்கு அழைப்பதாகக்கண்டு மண்வெட்டியையும் தோழில் தூக்கி வைத்துக் கொண்டு மனைவி பார்வதியையும் எழுப்பிச் சொல்லாமல் கிளம்பிவிட்டார். அவருக்கு இரத்த அழுத்தமிருந்தது அவருக்குத் தெரியாது. கடும் வேலை செய்கையில் இடதுகையும் காலும் உழைவதை அவர் உதாசீனப்படுதிவிட்டார். தனக்கு முன்னே யாரோ வேகமாக நடப்பது போல கற்பனை பண்ணிவிட்டார். இரத்தாசயம் கூடுதலாக அடிக்கவே இரத்தவாந்தியும் மரணமும் அவரை தழுவிக்கொண்டது. இது போன்ற பேய்க் கதைகள் அக்காலத்தில் கிராமங்களில் ஏராளம். எதாவது தீடிரென்று நடந்து விட்டால் கொள்ளி வால் பிசாசு, புளியமரத்து முனி, மோகினிப் பிசாசு. சுடலை இரத்தக் காட்டேரி எனப் பல பெயர் வைத்து கட்டுக்கதைகள் புனைவதில் ஊர்வாசிகள் பேரின்பம் அடைந்தனர். அதில் இலாபம் அடைவது உள்ளூர் கோயில் பூசாரிமாரும் மந்திரவாதிகளுமே.

**கடும் உழைப்பு**

காலை பத்து மணிக்குப் பின் தண்ணீர் பாச்சுவது கடினம். ஏன் என்றால் யாழ் குடாநாட்டில் வெப்பம் அதிகம். அதுவுமன்றி பயிர்களுக்கும் நல்லதல்ல. ஆகவே அதிகாலையில் விவசாயிகளை கூவி அழைத்து வெப்பம் கூடு முன் தண்ணீர் இறைத்து முடித்து விடுவார்கள். தண்ணீர் இறைக்கும் போது களைப்பு போக நாட்டுப்பாடல்கள் பாடுவார்கள். இது கடற்கரை ஓரத்தில் கரை வலை இழுக்கும் போது மீனவர்கள் பாடும் பாடல்களைப் போன்றது. விவசாயிகள் தம் பிள்ளைகளையும் தண்ணீர் இறைக்கும் போது உதவிக்கு கூட்டிச் செல்வது வழக்கம். அதன் பின்னரே அப்பிள்ளைகள் காலை குளித்து காலைப்போசனம் அருந்திய பின்னர் பாடசாலைகளுக்குச் செல்வது வழக்கம். அவ்வாறு கடும் உழைப்பினாலும் படிப்பினாலும் படித்து அறிவாளிகளானவர்கள் பலர். முன்னை நாள் உணவுக் கட்டுப்பாட்டாளர் ஆள்வாய்பிள்ளை அப்படிக் கல்வி கற்றதாக கதையுண்டு. காலையில் பழையசோறு தான் அவர்கள் விரும்பி உண்ணும் உணவு.

யாழ் விவசாய மக்களின் கலாச்சாரத்தில் ஒரு காலத்தில் ஊறிய துலா மிதிக்கும் கலாச்சாரம் பற்றி Sir Emerson Tennet என்பவர் 1859ல் எழுதியுள்ளார். இந்த துலா மூலம் தோட்டங்களுக்கு தண்ணீர் இறைக்கும் கலாச்சாரம், தண்ணீர் இறைப்புக் குழாயினதும் (Water Pump) மின்சாரத்தினதும் வருகையினால் மறைந்து விட்டது என்றே சொல்லலாம். இதனால் அதை நம்பி வாழ்ந்த தொழிலாளிகள் பலர் பாதிக்கப் பட்டனர். உடலுக்குத் தேவையான தேகாப்பியாசம் விவசாயிகளுக்கு இல்லாமல் போய்விட்டது. மின்சாரம் இல்லாத கிராமப் புறங்களிலும், பம்பை வாங்க பண வசதியில்லாதவர்களும் இன்றும் பழைய முறையையே கடைப்பிடிக்கின்றனர்.

ஆய்வு நூல்:

The Ceylon We Knew V Vamadevan - (Retired DIG Sri Lanka)

கனடா

# நன்னீர் ஏரியில் உலகில் மிகப் பெரிய தீவு

மைத்திரேயி

ஒரு நாட்டின் வளர்ச்சியில் பழங்குடி மக்களின் வரலாறு முக்கிய பங்கு வகிக்கின்றது. காலப்போக்கில் அந்நியர்களின் ஆக்கிரமிப்பினால் அக்குடிமக்களின் மொழி, மதம், பழக்க வழக்கங்கள், கலை, கலாச்சாரம் தொழில் ஆகியவை மாற்றமடைந்து படிப்படியாக அழிந்து வருகிறது. இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் நியூபவுண்ட்லந்தில் வசித்துவந்த ஒரு பழங்குடி இனத்தவரில் எஞ்சியிருந்தோரை குடியேற்ற வாசிகள் முற்றாக அழித்ததாக சரித்திரம் கூறுகின்றது. சில நூற்றாண்டுகளில் இக்குடிமக்களின் தனித்துவம் மறைந்துவிடும். இம்மாற்றத்தை நாம் கனடா, ஸ்ரீலங்கா , அமெரிக்கா, அவுஸ்திரேலியா போன்ற நாடுகளில் காணக்கூடியதாயிருக்கிறது. கனடாவில் உள்ளூர்வாசிகளான இந்தியர்கள் (Native Indians) ஒதுக்கப்பட்ட இனமாக வாழ்கிறார்கள். சிலபகுதிகள் அவர்கள் வாழ்வதற்கென ஒதுக்கபட்டுள்ளன. உதாரணத்திற்கு (First Nations) என அழைக்கபடும் ஆறு தேச பகுதிகள் வெவ்வேறு பழம் குடி இனங்கள் வாழ ஒதுக்கப்பட்டுள்ளது. கனேடிய முதலாம் தேசம் என்ற இன மக்கள் 608 பூர்வ குடி இனங்களைக் கொண்டது. அப்படியும் அவர்கள் நிம்மதியாக வாழ குடியேற்றவாசிகள் அனுமதிப்பதில்லை. சில ஆண்டுகளுக்கு முன்னர் ஜோர்ஜ

(George) என்ற ஆதிவாசி தங்கள் முன்னோரின் சவக்காலைக்கு உரிமை கோரி ஆர்ப்பாட்டம் செய்தபோது சுட்டுக்கொல்லப்பட்டார். அந்த விசாரணை ஆமை வேகத்தில் நடந்து வருகிறது. கனவினை பிடிக்கும் வட்டமான ஒரு சின்னம் (Dream Catcher) இம்மக்களிடையே பிரபல்யமானது. இது சுட்டமண் வளையத்துக்குள் சிலந்தி வலைபோல் பின்னப்பட்டிருக்கும். கெட்ட ஆவிகளை, சிலந்திவலைபோல் இது பிடிக்க உதவுகிறது என்பது அவர்களின் நம்பிக்கை. அதோடு இவர்கள இயற்கையன்னையை தெய்வமாக வழிபடுபவர்கள். ஆன்மீகத்தில் நம்பிக்கையுள்ளவர்கள். மத்தளம் அடித்து இயற்கையுடன் உறவாடும் வழக்கத்தை உடையவர்கள். கழுகின் இறகினை இவர்கள் ஆடைகளில் பாவிப்பார்கள்.

ஒன்றாரியோ மாகாணத்தில் உள்ள சட்பரி நகரத்தில் இருந்து 171 கி.மீ தூரத்தில், 1068 சதுர மைல்கள் உள்ள மனிடோலியன் தீவு (Manitolian Island) அமைந்துள்ளது. இதுவே உலகில் நன்னீர் ஏரிகளில் உள்ள மிகப் பெரிய தீவாகும். இத்தீவுக்குள் 108 நன்னீர் ஏரிகளும், 3 நதிகளும், ஒரு நீர் வீழ்ச்சியும் உண்டு என்பதைக் கேட்டால் ஆச்சரியப்படுவீர்கள். அதோடு மட்டுல்ல மிகப்பெரிய தீவுக்குள் மிகப் பெரிய நன்னீர் ஏரியில் மிகப்பெரிய தீவொன்றும் உண்டு. உலகத்தில் பல முதலாவது இடத்தில் இருக்கும் சாதனைகளை படைத்துவிட்டது இத்தீவு. புலம் பெயர்ந்து ஒருவட்டத்துக்குள் வாழும் பல கனேடிய தமிழர்களுக்கு இத்தீவைப்பற்றியே தெரியாது. அதோடு மட்டுமல்ல இத்தீவு 1836ம் ஆண்டு எழுதப்பட்ட கனேடிய அரசின் ஒப்பந்தத்தின் படி பூர்வ குடிமக்களான (Anishinaabe) அனிசினாபே எனப்படும் பூர்வகுடிமக்களுக்கென ஒதுக்கப்பட்டு அவர்களால் பரிசுத்தமான தீவாக கருதப்படுகிறது. இவர்கள் Ojibwe, Odawa and Potawatomi, இனத்தினைச் சேர்ந்தவர்கள்.

பூர்வ குடிமக்களுக்கென ஒதுக்கப்பட்ட தீவானாலும் அவர்கள் அங்கு சென்று வாழ தயங்கியதால் 1862ல் திரும்பவும் ஒப்பந்தம் திருத்தி எழுதப்பட்ட சில பகுதிகள் மட்டும் பூர்வ குடிமக்களுக்கென ஒதுக்கப்பட்டது. ஆனால் (Wikwemikong) விக்வீமீகொங் என்ற பகுதி இன்னும் கனேடிய அரசிற்கு ஒப்பந்தத்தால் பூர்வகுடிமக்களால் கொடுக்கப்படவில்லை (Unceded Indian Reserve) என்பது குறிப்பிடத்தக்கது. 1862ல் எழுதப்பட்ட கனேடிய அரசின் மனிடோலியன் ஒப்பந்தத்தில் இன்றுவரை இப்பகுதி மக்கள் கையெழுத்து இடாது வாழ்கிறார்கள்.

கி.மு 10,000 ஆண்டளவில் இத்தீவில் மக்கள் வாழ்ந்ததிற்கான தொல்பொருள் ஆராய்ச்சியில் கிடைத்த ஆதாரங்கள் உண்டு. 300 சதுரமைல்கள் உள்ள இப்பகுதியில் சுமார் மூவாயிரம் Odawa, Ojibwe and Potawotami பூர்வ குடிமக்கள் வாழ்கிறார்கள். வெளியில் இருந்து தம் பகுதிக்கு வருவோரிடம் அன்பாக பழகும் சுபாவம் உள்ளவர்கள். பவ் வௌவ் (Pow Wow) என்பது பூர்வ குடிமக்களின் மரபு வழிவந்த நடனமாகும். ஸ்ரீலங்காவில் அந்நியர்களின் ஆதிக்கத்தால் எவ்வாறு மதமாற்றம் ஏற்பட்டதோ அதேபோல் இப்பகுதியில் வாழ்ந்த பூர்வ குடிமக்களும் (Jesuit missionaries) ஜெசுவிட் மிஷனரிகளால் மதமாற்றம் செய்யப்படனர். ஒரு காலத்தில் யாழ்குடாநாட்டில் அமெரிக்கன், கத்தோலிக்க மிஷனரிகள் கடைப்பிடித்த வழியைப் போன்ற முறையைக் கடைப்பிடித்தது ஜெசுவிட் மிஷனரிகள். அத் தீவு மக்களுக்கு கல்விக் கூடங்களும், வைத்திய வசதிகளும் கொடுத்து மதமாற்றம் செய்தனர். வெளி இன மக்களின் ஊடுருவல்களால் தொற்று நோய்கள் பரவி தீவு எரிக்கப்பட்டு பரிசுத்தப்படுத்துப்பட்டது. 150 வருடங்களாக இத்தீவில் மக்கள் வாழப் பயந்தனர். ஆனால் காலப்போக்கில் குடிபுகத் தொடங்கி இப்பொழுது விடுமுறைக்காலங்களில், ஏரிக்கரையோரத்தில் குடிசைகள் அமைத்து, பொழுது போக்கி, மகிழ ஏராளமானவர்கள் இத்தீவுக்குப் போவதுண்டு. ரொறன்றோவில் இருந்து வடக்கேயுள்ள சட்பரி நகரூடாக தரை மார்க்கமாய் இத்தீவுக்குச் செல்வதற்கு சுமார் ஏழு மணித்தியாலங்கள் பிடிக்கும். அடுத்த கோடை கால விடுமுறையினை இங்கு கழிக்க இப்பொழுதே ஆயித்தங்கள் செய்யுங்கள்.

வரலாறு

# இலங்கைப் பறங்கியர்

பொன்

இலங்கையின் மக்கள்தொகையின் 0.40 விகிதமானோர் பறங்கியர்கள் எனப்படும் சிறுபான்மையினத்தவர்கள் ஆவர். இவர்களில் பெரும்பாலோர், ஆங்கிலமும் சிங்களமும் பேசுபவர்கள். புகையிரத திணைக்களத்தில் புகையிரதம் ஓட்டும் சாரதிகளாக பல பறங்கியர் ஒரு காலத்தில் வேலை செய்தனர்.

ஸ்ரீலங்காவில் “பறங்கியர் கோட்டைக்குப் போன மாதிரி” என்று பேச்சு வாக்கில் சொல்லும் சிங்கள வசனம் பிரபல்யமானது. அதன் அர்த்தம் “சுற்றி வளைத்து பேசாதே நேரடியாக விஷயத்துக்கு வா” என்பதாகும். போர்த்துக்கேயர் கொழும்பு துறைமுகத்தில் வந்திறங்கிய போது அவர்கள் ரொட்டி சாப்பிடுவதையும் வைன் குடிப்பதையும் கண்டு உள்ளூர் வாசிகள் வியந்தனர். இதென்ன வெள்ளை நிறக்கல்லைத் தின்று இரத்தத்தை குடிக்கிறார்கள் என்று ஆச்சரியப்பட்டு பேசிக்கொண்டார்கள். ஆனால் அவர்கள் தங்கள் சூழ்ச்சியால் இலங்கையின் பெரும்பகுதிகளை ஆட்சிபுரியப் போகிறார்கள்

என்பது உள்ளூர்வாசிகளுக்கு அப்போது தெரிந்திருக்கவில்லை. தங்களை கோட்டை இராஜதானியை ஆண்ட மன்னனிடம் அழைத்துப் போகும் படி போர்த்துக்கேயர் கேட்டபோது மன்னனின் அரண்மனை இருந்த கோட்டை என்ற இடம் அண்மையிலிருந்தபோதும் வெகு தூரத்தில் இருக்கிறது என்று காட்டுவதற்காக அவர்களை உள்ளூர் வாசிகள் பல வழிகளால் சுற்றி சுற்றி அழைத்துச்சென்றதாக ஒரு கதையுண்டு. இந்த பறங்கியர்கள் யார்? எவ்வாறு இவர்கள் காலப்போக்கில் இலங்கையில் சிறுபான்மை யினமானார்கள் என்பது சரித்திரம்.

ஒல்லாந்தர் இலங்கையை ஆட்சிசெய்த போது Maetsuyker என்ற டச்சுக்காரன் 1646 முதல் 1650 வரை கவர்னராயிருந்த காலத்தில் Burgher என்ற இனப் பெயரை இலங்கை வாழ் டச்சுக்காரர்களுக்குச் சூடினார். வில்லியம் டிக்பி என்பவர் இவர்களை Eurasians of Ceylon என அழைத்தார். அதாவது ஐரோப்பியர்களும் ஆசியர்களும் கலந்த இனம் என்பதை அது குறிக்கும். பறங்கியர்கள் ஜெர்மன் மரபுவழிவந்தவர்கள் என்கிறார் இலங்கைப் பறங்கியர் சங்கத் தலைவர். 1665ல் சுமார் 65 மணமாகிய பறங்கியர் குடும்பங்கள் இலங்கையில் வாழ்ந்தனர். ஒல்லாந்தாரின் முதல் முப்பது வருட ஆட்சியின் போது 500க்கு மேற்பட்ட பறங்கியர் வாழ்ந்தனர். இவர்களில் பெரும்பாலோர் மாலுமிகள், கள்ளுத் தவறணை நடத்துபவர்கள், அரசசேவையில் லிகிதர்கள், இராணுவத்திலிருந்து ஓய்வுபெற்றவர்கள் உள்ளூர் வாசிகளைவிட இவர்களுக்கு ஒல்லாந்து அரசு தனிப்பட்ட சலுகைகளைக் வழங்கியது. சுருங்கச் சொன்னால் இலங்கையில் இன வேற்றுமை ஐரோப்பிய ஆட்சியாளர்களால் செயல்படுத்தப்பட்டது. உள்ளூர் வாசிகளை விட பறங்கியருக்கு அரசசேவையில் அதிக வாய்ப்பு இருந்தது. பாண் சுடுதல், காலணி தயாரித்தல், இறைச்சிக் கடை வைத்திருத்தல் போன்ற வியாபரங்கள் அவர்களுக்கென ஒதுக்கப்பட்டு சுதந்திரமாக வணிகம் செய்ய முழு உரிமைகளும் வழங்கப்பட்டன. டச்சுப் பறங்கியர் திருமணம் செய்வதில் சில விதிமுறைகள் இருந்தன. உள்ளூர் பெண்களைத் திருமணம் செய்யச் சட்டம் இடம் கொடுத்தாலும், அப்பெண்களை போர்த்துக்கேய ஆண்கள் திருமணம் புரிய கிறிஸ்தவர்களாக இருக்கவேண்டியது அவசியம். இந்து அல்லது பௌத்த மதப் பெண்களை அவர்கள் திருமணம் செய்ய முடியாது. இவர்களுக்கு பிறந்த பெண்பிள்ளைகளும் டச்சுப் பறங்கியரை மட்டுமே திருமணம் செய்ய முடியும்.

காலப்போக்கில் பறங்கியர் இனம் இரண்டாக வளரத்தொடங்கியது. ஒன்று டச்சுப் பறங்கியர் இனம் மற்றது போர்த்துக்கேய பறங்கியர். டச்சு பறங்கியர்கள் வெள்ளை நிறத்தவர்களாகையால் உயர்ந்த இனமாகக் கருதப் பட்டனர். இவர்கள் ஐரோப்பியர்களாக கருதப்பட்டனர். போர்த்துக்கேயர் நிறம் குறைந்தவர்கள். டச்சு பறங்கியர் தம் இனத்தை போர்த்துக்கேய பறங்கியரை விட உயர்சாதியினர் எனக் கருதினர். மற்றைய போர்த்துக்கேய பறங்கியர்களை இவர்கள் ஆங்கிலத்தில் Mikoes, Lafai Types, Tea bushes , Godaya, Yako, Karapati lansi எனப் பல பெயர்களால் அழைத்தனர். கரபொத்தி லன்சி என்று வெள்ளையரல்லாத பறங்கியரை அழைக்கும் முறை இன்றும் இலங்கையில் இருந்துவருகிறது. கரப்பான் பூச்சியை கரபொத்தி லன்சி என்ற பறங்கியருடன் இணைத்துப் பேசும் வழக்கம் இலங்கையில மரபு வழிவந்த பழக்கமாகும். இவர்கள் ஐரோப்பியர்களாக கருதப் படவில்லை. இப்பறங்கியர் Creole என்ற பாஷைபேசும் கத்தோலிக்க மதத்தினர். டச்சுக்காரர் ஸ்பானியர்களின் ஆதிக்கத்தின் கீழ் ஐரோப்பாவில் இருந்த காரணத்தால் புரொத்தஸ்தாந்து மதத்தை சேர்ந்த அவர்கள், கத்தோலிக்க மதத்தைச் சேர்ந்த போர்த்துக்கேய பறங்கியரை வெறுத்தனர் என்பது ஒரு காரணமாகும்.

ஒல்லாந்தர் ஆட்சியில் கடைசி தசாப்தங்களில் ஒல்லாந்தரின் இராணுவத்தின் ஒரு பகுதியாக பறங்கியர்கள் செயலாற்றினார்கள். ஒல்லாந்தருக்கும் பிரித்தானியருக்கும் இடையேயான நான்காவது போரில் அவர்கள் கொழும்பு நகரம் பிரித்தானியர் கைவசம் போகாமல் எதிர்த்து நின்று போராடினர். ஐரோப்பாவிலிருந்து பல பறங்கியர் இலங்கைக்கு வந்து குடியேறி உள்ளூர் பெண்கள் பலரைத் திருமணம் செய்தனர்.

1796ல் பிரித்தானியர் இலங்கையை ஒல்லாந்தரிடமிருந்து கைப்பற்றிய போது கிட்டத்தட்ட 900 பறங்கியர் குடும்பங்கள் கொழும்பு , காலி , மாத்தறை , யாழ்ப்பாணம், மட்டக்களப்பு போன்ற நகரங்களில் வாழ்ந்தனர். பிரித்தானியர் ஆட்சியில் பறங்கியருக்கு உள்ளூர்வாசிகளை விட பல சலுகைகள் கிடைத்தன. டச்சுப் பறங்கியர் படிப்படியாக தம் மொழியை மறந்து ஆங்கிலத்தை கற்கத்தொடங்கினர். 1860ல் டச்சு மொழி முற்றாக மறைந்தது. போர்த்துக்கேய பறங்கியர் 19ம் நூற்றாண்டு வரை Creole மொழியைப் பாவித்தனர். அதன் பின் அம்மொழியும் மறைந்தது. 1907ல் டச்சு பறங்கியர் தமக்கென ஒரு சங்கத்தை உருவாக்கினார்கள்.

பிரித்தானியரின் ஆட்சிக்குப்பின் பறங்கியருக்கு அரசில் கிடைத்த சலுகைகள் மறைந்தன. சிங்களம் மட்டும் சட்டம் அமுலுக்கு வந்தவுடன் பல பறங்கியர் அவுஸ்திரேலியாவுக்கும் கனடாவுக்கும் இடம் பெயர்ந்தனர். 1963ல் 45,990 ஆக இருந்த பறங்கியர் தொகை 1981ல் 39,374 ஆகக் குறைந்தது.

**ஒல்லாந்தருக்கும் பிரித்தானியருக்கும் இடையேயான நான்காவது போரில் அவர்கள் கொழும்பு நகரம் பிரித்தானியர் கைவசம் போகாமல் எதிர்த்து நின்று போராடினர்.ஐரோப்பாவிலிருந்து பல பறங்கியர் இலங்கைக்கு வந்து குடியேறி உள்ளூர் பெண்கள் பலரைத் திருமணம் செய்தனர்.**

## யாழ்ப்பாணத்தில் பறங்கியர்

யாழ்பாணத்தில் பறங்கியர் குடும்பங்கள் வாழ்ந்த தெருவை பறங்கித்தெருவென அழைத்தனர். இது பிரதான வீதியின் ஒரு பகுதியாகும். டச்சுப் படையில் சேவை செய்து ஓய்வு பெற்றவர்கள் பலர் யாழ்பாணத்தில் குடியேறினார்கள். அவர்கள் டச்சுக்காலத்தில் கட்டப்பட்ட வீடுகளில் வாழ்ந்தார்கள். இவ்வீடுகளில் சிலவற்றை இன்றும் யாழ்ப்பாணத்தில் காணலாம். யாழ்ப்பாண பறங்கியர்கள் பலர் பரியோவான் கல்லூரியிலும் வேம்படியிலும் கல்வி பயின்றனர். வான்டுவேஸ்ட் என்ற பறங்கியினத்தவர் 60ல் யாழ்ப்பாணத்தில் பொலீஸ் அதிகாரியாக கடமையாற்றினார். இவர் விளையாட்டுத் துறையில் அதிகம் அக்கறை காட்டினார். மாக்(Mack) என்பவர் மத்திய கல்லூரியில் 1930 - 40 களில் கால் பந்து விளையாட்டைப் பயிற்றுவித்தார். Miss.Poulier யாழ் இந்துக்கல்லூரியில் ஆசிரியையாக 1940வரை கடமையாற்றினார். 1966ல் யாழ்ப்பாண மாவட்டத்துக்கு அரசாங்க ஏஜண்டாக வேர்ணன் அபயசேகர என்ற பறங்கியினத்தவர் கடமையாற்றினார். இவருக்கு நாடகத்துறையில் நல்ல ஈடுபாடிருந்தது. தற்போது அவுஸ்திரேலியாவில் வசித்துவருகிறார். Dr R Brohier என்பவரின் மூதாதையர்கள் யாழ்ப்பாணவாசிகள். யாழ்ப்பாணத்தில் உள்ள டச்சுக்காரர்கள் 1706ல் ஒரு கிறிஸ்தவ தேவலாயத்தைக் கட்டினர். Martinus Leusekam என்பவர் இதன் கட்டிடக் கலைஞர் ஆவார். யாழ்ப்பாணம் - கொழும்பு இரயில் பாதை ஸ்தாபிக்கப்பட்டபின் யாழ்ப்பாணத்துப் பறங்கியர்கள் கொழும்புக்கு இடம் பெயர்ந்தனர். யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த பறங்கியர் குடும்பங்களில் குறிப்பிடப் பட வேண்டிய குடும்பங்கள் De Kretsers, Werkmeisters, Leembruggem போன்றோரின் குடும்பங்களாகும். யாழ்ப்பாணத்தில் இப்போது பறங்கியர்களைக் காண்பது அரிது.

## கொழும்புப் பறங்கியர்

ஆரம்பக் காலத்தில் கொழும்பில் பறங்கியர்கள் பெட்டா (Pettah) என்ற பகுதியில் வாழ்ந்தார்கள். காலப்போக்கில் இவர்கள் காலி வீதியில் உள்ள கொள்ளுப்பிட்டி, பம்பலபிட்டி பகுதிகளிலும், கறுவாக்காடு பகுதிகளிலும் பரவலாக வாழ்ந்தனர். கொழும்பில் பிரபல்யமான பறங்கியர்களில் குறிப்பாக Antonisz, Arndt (Police Service) . Bartholomeuz Janz, Prins, Scharengivel, Hepponstall (இப்பெயரைக்கொண்டவர் தபால் இலாக்காவில் கடமை புரிந்ததோடு, பறங்கியர் பலர் தபால் இலாகாவில் பணிபுரிந்துள்ளனர்Van Langenberg, Van Dort , Kelaart, Spittel குடும்பங்களைச் சொல்லலாம்.

## மட்டக்களப்பு பறங்கியர்

ஒரு காலத்தில் போர்த்துக்கேயர் கரையோரப்பகுதிகளைக் கைப்பற்றுவதில் முக்கிய கவனம் செலுத்தினர். அவர்களின் வீரர்கள் மட்டக்களப்பில் காலடி வைத்தவேளைகளில் தம்மோடு தமக்கு உதவியாகத் தச்சு வேலைசெய்பவர்கள், காலணி தயாரிப்பவர்கள், கொல்லர்கள், மேசன் வேலை செய்பவர்களையும் அழைத்துவந்தனர். அவர்கள் பின்னர் தாம் வாழும் பூமியாக்கிக் கொண்டனர். 500 ஆண்டுகளுக்கு முன்னர் மட்டக்களப்பு பகுதிக்கு படை வீரர்களாக வந்த இவர்கள் காலப்போக்கில் டச் பார் பகுதியைத் தெரிந்தெடுத்து தச்சர்களாக, நாவிதர்களாக. மீனவர்களாக வாழ்ந்தனர். அங்கு வாழ்ந்த தமிழ் இனத்துடன் கலந்து, வாழ்ந்தாலும் தமது இணத்தின மரபு வழிவந்த முறைகளையும் கலாச்சாரத்தையும் அவர்கள் மறக்கவில்லை. போர்த்துக்கேய மொழியான Creole மொழியை 1984ம் ஆண்டு வரை அவ்வின முதியவர்கள் பலர் பேசிவந்தனர். மட்டக்களப்பு பறங்கியர்கள் தமக்கு ஐரோப்பிய பெயர்களான Jacob, Stephen, Vincent. De lima, Barthelot போன்ற பெயர்களையே சூட்டிக்கொண்டனர். மட்டக்களப்புப் பறங்கியர் திடகாத்திரமானவர்கள். குணத்திலும் அவ்வாறே அவர்கள் இருந்தனர். சுமார் 290 பறங்கிய குடும்பங்கள் Duatch Bar பகுதியில் வாழ்நதனர். 2004ம் ஆண்டு அப்பகுதியை சுனாமி தாக்கிய போது 150 பறங்கியர்கள் உயிர் இழந்தனர். இவர்களுக்கு கனடா, அவுஸ்திரேலியா, இங்கிலாந்து போன்ற தேசங்களில் புலம் பெயர்ந்து வாழும் பறங்கியர்களிடம் இருந்து நிதி உதவி கிடைத்தாலும் தாம் ஒரு புறக்கணிக்கப்பட்ட சமுதாயம் என்பதே அவர்கள் கருத்து.

## பிரபலமான பறங்கியர்கள்.

1860ல் மாத்தறையைச் சேர்ந்த இளம் வழக்கறிஞரான சார்ல்ஸ் அம்புரொஸ் கொழும்பில் உள்ள Hulftsdorp என்ற நீதிமன்றங்கள் உள்ள பகுதியில் சட்டத்துறையில் பிரபலமானவராகத் திகழ்ந்தார். அவரைச் சட்டத்துறையின் உதயதாரகை என அழைத்தனர். இவர் வேறு சில பறங்கியர்களுடன் கூட்டாக இளம் இலங்கை என்ற சஞ்சிகையை வெளியிட்டார். 1859ல் லோரன்ஸ் என்பவர் Ceylon Examiner என்ற ஆங்கிலப் பத்திரிகையை வெளியிட்டார். பிரித்தானிய ஏகாதிபத்தியத்தை விமர்சித்து இப்பத்திரிகை எழுதியது. பல பறங்கியர்கள் கொழும்பு மாநகரசபைக்கு கவுன்சிலர்களாக தேர்ந்தெடுக்கப்பட்டனர். 1937ல் Dr V R Schokman என்பவர் மேயராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். இவர் வைத்தியத் துறையில் மட்டுமன்றி விளையாட்டுத் துறையிலும் ஆர்வம் காட்டினார்.

பல தசாப்தங்களுக்கு முன்னர் ஸ்ரீலங்காவில் வாழும் பல் இனத்தவர்களிடையே மதிப்பும் மரியாதையும் பெற்று உயர் பதவிகளைப் பறங்கிய சமூகத்தவர் வகித்தனர், சிங்களம் மட்டும் சட்டத்தால் வெகுவாக பாதிக்கப்பட்ட இனங்களில் ஒன்று பறங்கியர். அவர்களில் பலர் அவுஸ்திரேலியாவுக்கு புலம் பெயர அந்நாட்டு அரசு சலுகைகள் வழங்கியது. இன்னும் சில வருடங்களில் இவ்வினம் இருந்த இடம் தெரியாமல் ஸ்ரீலங்காவில் மறைந்துவிடும் என்பதில் ஐயமில்லை.

# விற்பனை முற்கணிப்பு



வணிகத்தில் எதிர்காலத்தில் நடக்கப்போவதை முற்கூட்டியே கணிக்கும் திறமையினை அனுபவ வாயிலாகப் பெற்றால் அதுவே வணிகம் வளர பேருதவியாக இருக்கும். ஆனால் விற்பனைக் கணிப்பு முறைக்கு நம்மவர்கள் முக்கியத்துவம் கொடுப்பதில்லை. உதாரணத்துக்கு நமது வாழ்க்கையானது நல்லதும் கெட்டதும் கலந்த காலக்கட்டங்களைக் கொண்டது. கெட்ட காலத்தில நாம் ஓடிப் போய் எமது ஜாதகத்தை சாஸ்திரியிடம் காட்டி "ஐயா எனக்கு காலம் எப்படி இருக்கும் என்று பார்த்துச் சொல்லுங்கள" என்று கேட்பது ஜாதகத்தில் நம்பிக்கை உள்ளவர்களின் வழக்கம். அவர் சொல்லும் கணிப்பில் நம்பிக்கை வைத்துச் செயலாற்றுவோர்களும் உண்டு. சாஸ்திரியார் ஜாதகரின் கிரக நிலையயைப் பார்த்தும் தனது அனுபவத்தை வைத்தும் சாஸ்திர முறைப்படி கணித்துச் சொல்கிறார். இது மரபு வழிவந்த நம்பிக்கையின் அடிப்படையில் வளர்ந்த ஒரு கணிப்பு முறை. ஜாதகத்தின் கணிப்பை வைத்து வணிகம் செய்யமுடியுமா? "உனக்கு சுக்கிர திசை நடக்கிறது. வியாழ சுகமுண்டு. உனது வணிகம், பணத்தை உனக்கு அள்ளிக் கொட்டும்" என்று சாஸ்திரியார் சொன்னால் அதைக் கேட்டவர் "சாஸ்திரியார் சொல்லிவிட்டார் இனி என்ன" என்று பேசாமல் இருந்தால் அவரது வணிகத்தின் கதி என்ன? அதே போன்று "இப்போது உமக்கு நடப்பது அட்டமத்துச்சனி அதோடு சனி திசையில் வேறு அதனால் நீர் தொட்டதெல்லாம் தடைப்படும்' என்ற ஒரு அவநம்பிக்கையை ஜாதகர் மனதில் உருவாக்கிவிட்டால் அது போதும் அவர் முயற்ச்சியில் ஈடுபடாமல் வேறு வழிகளைப் பற்றி ஆராய்வதை விட்டுப் பேசாமல் முடங்கிக் கிடப்பதற்கு. சாஸ்திரியார், ஜாதகர் செய்யும் வணிகமானது வருங்காலத்தில் நாட்டின் பொருளாதாரம், மக்களின் தேவைகள், வருமானத்தில் மாற்றங்கள், வாழ்க்கைச் செலவின் உயர்வு, அரசியல் மாற்றங்கள், போட்டியாளர்கள், போட்டிப் பொருள்கள் ஆகியவற்றின் வருகை, வரிகளில் மாற்றம், இயற்கையினால் ஏற்படும் அனர்த்தங்கள், வணிக ஸ்தாபனத்தின் பரிபாலனம் போன்றவற்றைக் கருத்தில்கொண்டு எதிர்காலத்தைக் கணிப்பதில்லை. கிரகநிலை அடிப்படையில் அவரது கணிப்பு இருக்கிறது. ஆனால் வணிகத்தில் விற்பனையையும், வருமானத்தையும் கணிக்கும் முறைகள் மேற் குறிக்கப்பட்ட காரணிகளைக் கருத்தில்கொண்டு கணிக்கப்படும் முறைகளாகும். வணிகத்திட்டம் தயாரிப்பதற்கு இத்தகைய கணிப்பு முறை முதுகெலும்பாகிறது. ஆகவே இதன் அடிப்படையிலே

தொடர்ந்து செய்யப் போகும் வணிகமோ அல்லது புதிதாக ஆரம்பிக்க இருக்கும் வணிகமோ வெற்றி நடை போடுமா அல்லது பிரச்சனைகளைச் சந்திக்குமா என்று தீர்மானிப்பதற்கு உதவுகிறது.

வணிகத்தின் விரிவுக்கு பல தீர்மானங்களை எடுப்பதற்கும், எதிர்பாராத விதத்தில் விற்பனை மாற்றங்களால் ஏற்படும் பாதிப்புகளைச் சந்திப்பதற்கும், அதற்கேற்ப முன் கூட்டியே திட்டங்களைத் தீட்டுவதற்கும் முற்கணிப்பு அவசியமாகிறது. முதல் முறையாக ஒரு சேவையை அல்லது பொருளினை விற்பனை செய்ய ஆரம்பிக்கமுன் அதன் வளர்ச்சி எவ்வாறு இருக்கும் என்பதை கணிப்பது அவசியம் குழந்தை பிறந்தவுடன் அதன் வருங்காலம் எப்படி இருக்கும் என்பதைக் கணிப்பது போல். ஆனால் இங்கு பொருளை அல்லது சேவையினைச் சந்தையில் அறிமுகப்படுத்த முன்னரே கணிப்பு அவசியம். இது வணிக திட்டத்திற்கு மிக அவசியமானதொன்று. இதனை நம்மிடையேயுள்ள பல முயற்ச்சியாளர்கள் வணிகத்தில் செயல்படுத்துவது கிடையாது. ஜாதகத்தில வைத்திருக்கும் நம்பிக்கை முற்கணிப்பில் இருப்பதில்லை. குளத்தில் சேறு இருக்கிறது என்று தெரியாமல் காலை வைத்துவிட்டு அவதிபடுபவர்கள் பலர். அதேபோல் முற்கூட்டிய கணிப்பின்றி வணிகத்தை ஆரம்பித்துச் சில மாதங்களில் வங்குரோத்து நிலையையும் அடைந்துள்ளனர் சிலர். முற்கணிப்பானது சற்று கடினமான விடயம். அனுபவம் தேவை. பல தரப்பட்ட விடயங்களைப் பற்றித் தெரிந்து வைத்திருப்பது அவசியம். கணிப்புக்குத் தேவையான புள்ளி விபரங்களைப் (Statistics) பல கோணங்களில் அலசி ஆராய்ந்து பார்க்கும் ஆற்றல் அவசியம். இதற்கு அனுபவம் வேண்டும். சில சமயம் புள்ளி விபரங்கள் கணிப்பாளரை ஏமாற்றி விடும். இதற்கான சந்தை ஆராய்ச்சியாளர் (Market Researcher), அளவறி முறையாளர்கள் (Quantitative Technic Analyst) போன்றோரின் சேவை அவசியம். இங்கு அனுபவம், அறிவு, அலசும் திறமை போன்றவை முக்கிய இடம் வகிக்கின்றன. கணிப்பின் போது வருங்காலத்தில் நடப்பதை 100 விகிதம் பிழையின்றிக் கணிப்பது என்பது கடினம். தவறு விகிதம் (Percentage error) கணிப்புக் காலம் அதிகரிக்கும் போது அதிகரிக்கிறது. இதனால் கணிப்பினை +/- பிழை விகித எல்லைக்குள் (+/- % confidence interval) என குறிப்பிடுவதுண்டு. எதிர்காலத்தில் கணிப்பின் போது எடுத்துக்கொள்ளப்பட்ட காரணிகள் எவ்வாறு மாற்றமடையும் என்று கணிப்பது மிகவும் கடினமான விடயமாகும். மக்களின் வருமானம், அரசியல், தொழில்நுட்பம், பொருளாதாரம் ஆகியவை வெகு விரைவாக காலத்தோடு மாற்றம் அடைகின்றன. இவையெல்லாம் கணிப்பினை பாதிக்கிறது. ஆகவே செய்த கணிப்பினை அடிக்கடி பரிசீலனை செய்வது அவசியமாகிறது.




பல வருடங்களாக இயங்கி வரும் வணிகத்தின் எதிர்கால வருமானத்தை ஓரளவுக்குத் துல்லியமாகக் கணிக்க முடிகிறது. இதற்குக் காரணம் கடந்த கால விற்பனைப் புள்ளி விபரங்கள் கைவசம் இருப்பதே. ஒரு வணிகம் செய்பவர் தனது வணிகத்தை பற்றிய புள்ளி விபரங்களை மாதாந்தம் சேகரித்து வைப்பது மிகவும் அவசியம். உதாரணத்துக்கு ஒரு உணவகம் நடத்துபவர் ஒவ்வொரு கிழமையும் தனது கடையில் விற்பனையாகும் உணவுவகைகளைப் பற்றிய புள்ளிவிபரத்தை வைத்திருக்கிறாரா என்பது சந்தேகம். இப்புள்ளி விபரம் வணிகத்தின் வளர்ச்சியில் மாதாந்தம் ஏற்படும ஏற்றத் தாழ்வுகளைப் பற்றியும் (Seasonal Variations) எந்த உணவுவகைளை வாடிக்கையாளர்கள் அதிகளவு விரும்பி வாங்குகிறார்கள், அதன் காரணங்கள் என்ன போன்றவற்றை இதன் மூலம் அறியமுடியும். அதனால் தரத்தினைக் கூட்டி, விற்பனைக்குத் தேவையான அளவு உணவுவகைகளைச் சமைத்து விரயத்தைத் தவிர்க்கலாம். இது வருமானத்தையும் கணிக்க உதவும். இந்தக் கலாச்சாரத்தை நமது வணிகர்கள் மத்தியில் நடைமுறையில் கொண்டுவருவது கடினம். அதுவும் கணினி வசதிகள் இருந்தும் சிலர் இம்முறையினைச் சரிவரப் பாவிப்பது கிடையாது.

வெகு காலமாக இயங்கி வரும் சேவை அல்லது பொருட்களின் விற்பனைகள் போன்றவற்றின் வளர்ச்சியினை ஓரளவுக்கு மிகத் துல்லியமாக அடுத்துவரும் இரண்டொரு வருடங்களுக்குக் கணிக்க முடியும். காரணம் கடந்த சில வருடங்களுக்கான மாதாந்த விற்பனை புள்ளிவிபரத்தைச் சேகரித்து வைத்திருப்பின் கணிதச் சமன்பாட்டு பகுப்பு முறை மூலமும் (Regression analysis) நேரத் தொடர்பு பகுப்பு முறை மூலமும் (Time Series Analysis) ஓரளவுக்கு மதிப்பீடு செய்யமுடியும். முன்கணிப்புக் காலத்தினை மூன்று காலக்கட்டங்களாகப் பிரிக்கலாம்.

**கணிப்புக்காலங்கள்:**

**(1)** நீண்ட கால கணிப்பு ( **Long Term Forecast)**: இது இரண்டு அல்லது மூன்று வருடங்களுக்கு இடைப்பட்ட கணிப்பாகும். இக்கணிப்பு தொழிற்சாலையை விரிவாக்க, புது இயந்திரங்களை வாங்க, புதிய பொருட்களை விற்பனைக்கு அறிமுகப்படுத்தப் பயன் படும்.

**(2)** மத்திய காலக் கணிப்பு **(Medium Term Forecsat)**: ஒரு வருடத்துக்கும் இரண்டு வருடங்களுக்கும் இடைப்பட்டகாலம். இந்தக் கணிப்பின் மூலம் உற்பத்தியைப் பெருக்கும் இயந்திரத்தில் சில மாற்றங்கள், உற்பத்திப் பொருளில் சிறு மாற்றங்கள். தொழிற்சாலையில் உள்ள இடத்தை விரிவு செய்தல், ஊழியர்களின் எண்ணிக்கையினைக் கூட்டிக்குறைத்தல், அல்லது உற்பத்தியைப் பெருக்கல் அல்லது குறைத்தல் போன்ற நடவடிக்கைகளுக்கு உதவும்.

**(3)** குறுகிய கால கணிப்பு **(Short Term Forecsat)**: ஒரு வருடத்திற்குள் நடக்கப் போவதைக் கணிப்பது இது. இக்கணிப்பு வருடாந்த வரவு செலவுத் திட்டம் தயாரிக்க பாவிக்கப்படுகிறது. விளம்பரம், விலையில் மாற்றங்கள், பொருட்களைச் சேகரித்து வைத்தல் செயல் முறைகளில் மாற்றங்கள் செய்து உற்பத்தியைப் பெருக்கல் போன்றவைக்காக இந்தக் கணிப்பு பாவிக்கப்படுகிறது. கணித்த வருமானத்திற்கும் உண்மையாக கிடைத்த வருமானத்துக்கும் இடையேயுள்ள வித்தியாசங்களுக்கான காரணங்களை ஆராய்ந்தறிந்து தக்க நடவடிக்கை எடுக்கும் பகுப்பு முறை அவசியமாகிறது. தற்போது கைவசம் உள்ள நிதி தொடர்ந்து வணிகத்தை செயல்படுத்தப் போதுமா? எக்காரணங்களால் விற்பனை கணித்ததை விட கூடியோ அல்லது குறைந்தோ உள்ளது? பொருளின் தரத்தில் மாற்றங்கள் தேவையா? போன்ற வணிக சம்பந்தமான விடயங்களில கவனம் செலுத்த இக்கணிப்பு உதவும். சந்தைப் படுத்தும் முறையில் இதனை (Gap Analysis) என அழைப்பர். எதிர்பார்த்ததை விட நடப்பது வேறு படின் அதற்கான காரணங்களை ஆராய்ச்சி செய்து நடவடிக்கை எடுப்பது வணிகத்தின் மிகவும் அத்தியவசியமான செயல்பாடாகும்.

**பொருளின் வாழ்க்கைச் சுழற்ச்சி**

ஒரு விற்பனைப் பொருள் அல்லது சேவையின் வளர்ச்சி மனித வளர்ச்சியைப் போன்றது. ஆரம்பகாலத்தில் மெதுவாக உயர்ந்து, சில வருடங்களில் சந்தையைப் பிடித்தவுடன் விரைவாக வளர்ந்து, பெயரை நிலைநாட்டி, அதன் பின்னர் சில வருடங்களில் வளர்ச்சி மந்த நிலையை அடைகிறது. ஒரு விற்பனைப் பொருளின் இவ்வாழ்வினை பொருளின் வாழ்க்கை சுழற்ச்சி (Product Life Cycle) என்பர். இவ்வளர்ச்சியினை 5 பகுதிகளாகப் பிரிக்கலாம்.

(அ) பொருளை அல்லது சேவையினை உருவாக்கிய காலம்.

(ஆ) சந்தையில் அதனை அறிமுகப்படுத்திப் பரிசோதனை செய்யும் காலம்.

(இ) மக்களின் தேவைகளை பொருள் அல்லது சேவையானது பூர்த்தி செய்யின் விலையும் குறைவாகவும், தரமும் கூடுதலாகவும் இருப்பின் அது வெகுவிரைவாக வளரும் காலம் எனலாம்.

(ஈ) போட்டியாளர்களின் வருகையாலும், புதிய விலை குறைந்த தரம் கூடிய போட்டிப்பொருட்களின் அறிமுகம், இவைகளாலும் வளர்ச்சி தேங்கத் தொடங்கும் காலம்.

(உ) பொருளின் செயல்பாடுகளில், தரத்தில். விலையில் மாற்றங்கள் செய்யாது இருப்பின் வளர்ச்சியானது படிப்படியாக குறைந்து சந்தையில் இருந்து மறைந்துவிடும்.

**கணிப்பு முறைகள்**

இவ்வகையான ஒவ்வொரு வளர்ச்சிக்காலங்களுக்கும் வெவ்வேறு கணிப்பு முறைகள் உண்டு. அவைகளில் மிகவும் பிரபலமானவை சந்தையை அளவிடுதல் (Market Survey), கணிதச் சமன் பாட்டு முறை (Regression analysis). நேரத் தொடர்பு பகுப்பு முறை (Time Series Analysis), டெல்பி முறை (Delphi method) தேவைப் பகுப்பு (Demand Analysis) பாதிப்பு பகுப்பு (Impact Analaysis), சந்தர்ப்பங்களை ஆராய்ச்சி செய்தல் (Opportunity Analysis), பகர அமைப்பு கணிப்பு (Substituion forecasting) போன்ற முறைகளாகும். இவற்றை விட வேறு பலவிதமான முறைகளும் உண்டு. எந்தெந்த முறைகள் எந்த சூழ்நிலயில் பாவிக்கப்படவேண்டும் என்பதை அனுபவம் வாய்ந்த கணிப்பாளர்கள் அறிவார்கள். இதில் அனுபவம் வாய்ந்தவர்களின் சேவையினைப் பெற்று கணிப்பினைத் துல்லியமாகச் செய்வது வணிகம் வளர மிகவும் உதவும்.

உங்களுக்குத் தெரியுமா?

பெண்ணின் இருதயம் ஆணின் இருதயத்திலும் பார்க்க வேகமாக அடித்துக்கொள்ளும்

ஒவ்வொரு நிமிடமும் சுமார் 300 மில்லியன் கலங்கள் (Cells) மனித உடலில் இருந்து இறக்கின்றன.

சராசரி 45 மைல்கள் நீளமுள்ள நரம்புகள் சாதாரண மனித உடலில் உண்டு.

மனிதனின உடலில் மிகப் பெரியது தோல். இதன் சராசரி பரப்பளவு 25 சதுர அடிகளாகும்.

மனிதன் உணவு இல்லாமல் இறப்பதை விட நித்திரை இல்லாமல் வெகு விரைவில் இறப்பான். 10 நாட்கள் தொடர்ந்து நித்திரை இல்லாமல் இருப்பானாகில் இறந்து விடுவான் ஆனால் உணவு இல்லாமல் இறப்பதற்கு பல வாரங்கள் எடுக்கும்.

# இயற்கையும் மனிதனும்

விஷ்வா

இயற்கையின் வினோதங்கள் தான் எத்தனை? ஒரு குறுகிய கால எல்லைக்குள் அந்த அந்தக் காலத்துக்கு ஏற்ப இலைகள் தளிர்த்து பூக்கள் மலர்ந்து மறைகின்றன. அதுவும் கனடாவிலே சில மாதஙகளுக்குள் நடக்கிறது பருவ நிலை காரணமாக. அதே போல் நாமும் காலத்துக்கு ஏற்ப எம்மைத் தயார் செய்து கொள்கிறோம். பருவத்தில் பயிர் செய்து பயன் பெறுகிறோம். இந்து மதம் இயற்கையை அடிப்படையாகக் கொண்டது. மனிதனும் இயற்கையின் ஒரு அங்கம்தான். இயற்கையில் நாம் காணும் காட்சிகள் ஒவ்வொன்றும் மனித வாழ்க்கையுடன் தொடர்புள்ளது. ஒரு அழகிய மலரைக் கண்டவுடன் நாம் சற்று நின்று ரசித்துவிட்டுப் போகிறோம். ரசிகத் தன்மையற்ற ஒரு சிலர் மலரின் அழகைக் கண்டும் காணாதது போல் போய்விடுகிறார்கள். வேறு சிலர் அதனை தொட்டுப்பார்த்து மகிழ ஆசைப்படுவார்கள். இன்னும் ஒரு சிலர் அதைக் கொய்து தமக்குச் சொந்தமாக்க விரும்புவர். இதே போன்று தான் ஆணும், பெண்ணின் அழகைக் கண்டு ரசித்து அவளை தன் சொந்தமாக்க எண்ணுவதுண்டு. வீதியில் போகும் போது அழகான ஒரு நங்கையைப் பார்த்துவிட்டால் சிறிது தூரம் சென்ற பின்னர் நின்று திரும்பிப் பார்த்து ரசிப்பவர்களும் உண்டு. மலருக்கு மலர் தாவிச் செல்லும் வண்டானது எவ்விதம் பல மலர்களைச் சுவைக்கிறதோ அதே போன்று பல பெண்களுடன் தொடர்பு கொள்வோருமுண்டு. தன் வீட்டில் காய்க்கும் மாங்காயை விட அடுத்தவன் வீட்டில் காய்க்கும் மாங்காய்க்குத் தான் தனி மவுசுண்டு.. போகும் வழியில் காய்த்துக் குலுங்கும் மாமரத்தைக் கண்டவுடன் அதில் பழுத்த பழங்களை சுவைத்துப் பார்க்க வேண்டும் என்ற ஆசை உருவாவது சகஜம். உடனே அந்த மாமரம் கல்லெறிக்கு இலக்காகிறது. அதே சமயம் அருகே இருக்கும் மாமரம் காய்க்காது இருப்பின் கவனிப்பாரற்றுக் கிடக்கிறது. அதே போன்றுதான் செயலாற்றுபவர்கள், பலரின் விமர்சனத்துக்கு இலக்காகிறார்கள். ஒன்றும் செய்யாது பதவியில் இருப்பவர்கள் நல்லபெயர் எடுக்கிறார்கள். அவர்கள் திறமைசாலிகளா? என்ன சாதித்து விட்டார்கள்? என்று எண்ணிப்பார்ப்பது கிடையாது. எமக்குள் இருக்கும் திறமையும் எமது குடும்பத்தில் உள்வர்களின் திறமையும் எம் கண்களுக்கு சில சமயத்தில் தெரிவதில்லை.

கறுப்பு நிறம் என்றுவந்தவுடன் காகத்தோடு நிறத்தை குறிப்பிடுகிறோம். அது அசுத்தமான பறவை என்பதால் அதற்கு சமூகத்தில மதிப்பில்லை. ஆனால் உண்மையில அது சமூகத்திற்கு சேவை செய்கிறது. சுற்றாடலில் உள்ள அசுத்தமானவற்றை இல்லாமல் செய்கிறது. அதோடு மட்டுமல்ல அப்பறவை கிடைத்த உணவைத் தனியாக உண்ணாது மற்றைய காகங்களுடன் பகிர்ந்துண்ணும் குணம் உடையது. காக்கையின் சிறப்புக் குணாதிசயங்களை விளக்கும் ஒரு வெண்பா இதோ.

காலையெழுந்திருத்தல் காணாமலே புணர்தல்
மாலைகுளித்தல் மனைபுகுதல் - சாலவே
உற்றாரோடுண்ணல் உறவாடல் இவ்வாறும்
கற்றாயோ காக்கைக் குணம்

பராசக்தி படத்தில் காக்கா என்ற பாடல் அதை எடுத்துச்சொல்கிறது. அது எமக்கு ஒற்றுமையாக வாழவேண்டும் என்பதற்கு படிப்பினையாக அமைகிறது. "காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு" என்ற பழமொழி யாவரும் அறிந்ததே. தன் குஞ்சு கறுப்புநிறமானாலும் அதனை காகம் தள்ளி வைப்பதில்லை. காகக் கூட்டில குஞ்சுகளை பிடிக்கப்போய்த் தலையில குட்டுவாங்கிக் கொண்டுவரும் ஒரு நிலை பலருக்கு ஏற்பட்டிருக்கும். அதே போன்று சில பெற்றோர்களுக்கு தம் பிள்ளைகளைபற்றி மற்றவர்கள் விமர்சிப்பது பிடிக்காது. இயற்கையில எந்தப் பறவையோ மிருகமோ தனது வாரிசை ஆபத்தில் இருந்து பாதுகாத்துகொள்கின்றது. நாய் குட்டி போட்டிருக்கும் போது குட்டிகளின் அழகைப்பாத்து அதை நெருங்கினால் அதன் விளைவு பலர் அறிந்ததே. அந்தச் செயல் முறையை மனிதனும் கடைப்பிடிக்கிறான்.

காகத்தின் கூட்டை எடுத்துக் கொள்ளுங்கள். அதற்குத் தெரியாமல் அதன் கூட்டில் முட்டையிட்டு விட்டு குயில் பறந்து சென்று விடுகிறது. முட்டையை அடைகாக்கிறது காகம். குயில் குஞ்சு வெளியேவந்து கூக் கூ என தனது உண்மைச் சொரூபத்தைக் காட்டும் வரை அதற்கு உணவு ஊட்டி வளர்க்கிறது காகம். ஆனால் ஒரு நாள் உண்மை வெளிவந்தவுடன் குயில் குஞ்சை கொத்தித் துரத்திவிடுகிறது. இது இயற்கையில நாம் காணும் ஒரு நிகழ்ச்சி. குயிலின நிறம் கறுப்பானாலும் அதன் இனிய குரலை நாம் ஒதுக்கி வைப்பது கிடையாது. குயிலைப் போன்று வீட்டுக்குள் அபயம் என்று தேடி வந்தவருக்கு வீட்டில் தங்க வசதி கொடுத்த சிலர் காலப்போக்கில் அவரது கள்ள மனம் .வஞ்சகக் குணம் தெரியவந்தவுடன் வீட்டை விட்டு துரத்தி விடுகிறார்கள்.

அன்னத்திற்கு பாலுடன் நீரைக் கலந்து வைத்தால் நீரை நீக்கி பாலைக் குடிக்கிறது. எது பால் எது நீர் எனபது அதற்கு தெரியும். மனிதர்களில் சிலர் மனத்தின் அழகைப் பார்த்தே அவர் நல்லவரா கெட்டவரா என அறிந்து பழகுவார்கள்.

சலனமற்ற தடாகத்தில் அலைகளைக் காண்பது அரிது. தெளிவாக பிம்பத்தை அதில் பார்க்க முடியும். அதே போன்றது தான் சலனமற்ற மனிதனும். அவனது சிநதனைகள் தெளிவாக இருக்கும். அந்த தடாகத்தில ஒரு சிறு கல்லைப் போட்டால சிறு

அலைகள் தோன்றி தெளிவாகத் தெரிந்த பிம்பத்தை மறைத்துவிடும். அதே போன்று நம் மனதில் எவராவது ஒருவர் சலனத்தை ஏற்படுத்திவிட்டால் சிந்தனைகள் தெளிவாக இருப்பதில்லை.

இயற்கையில் பறவைகள், பூச்சியினங்கள், மீன்கள், மிருகங்கள் தங்களது உடலமைப்பினை, நிறத்தினைப் பயன்படுத்திப் பதுங்கியிருந்து பாய்ந்து தாக்கி தம் உணவைக் கொள்கின்றன. சில மீன்கள் கடலுக்கடியில் பாறைகளின் ஒத்ததோற்றத்துடன் பதுங்கியிருந்து தாக்கி மற்றைய மீன்களை இரையாக்கிக் கொள்கின்றன. இதனை Camouflaging என்பர். இந்த முறையினையே யுத்தத்தின போது கெரில்லாக்கள் தாக்குதலுக்கு பாவிப்பதுண்டு.

இதே போன்று தான் குருவிச்சை மரமும். இந்த செடி மாமரத்திலும் வேறு சில மரங்களிலும் ஒட்டிவாழ்கிறது. வேருண்ணி என்பார்கள். தான் வாழும் மரத்தின் சத்தை உறிஞ்சியெடுத்து வாழ்கிறது குருவிச்சை மரம். இதே போன்று மற்றவர்களை உறிஞ்சி வாழ்பவர்கள் பலர் இருக்கிறார்கள். இவர்கள் சுயநலவாதிகள். தங்களது காரியம் ஆகும் வரை எதையும் வெட்கமில்லாது செய்பவர்கள். அது அவர்களின பிறவிக்குணம். அதே சமயம் நல்ல மனம் படைத்தவர்கள் சந்தன மரம் போன்றவர்கள்.

எல்லா மரங்களுக்கும் மனிதர்களிடையே மதிப்பில்லை. சில மரங்கள் தெய்வீகத்தன்மை யுடையவை. சக்தி வாய்ந்தவை. ஆயுர் வேதத்தில் வைத்தியத்திற்காக பாவிக்கப்படுபவை. தொற்று வியாதிகளில் இருந்து மனிதனை வேப்ப மரம் பாதுகாக்கிறது. துளசிச் செடி ஒரு மருத்துவச் செடியாகக் கருதப்படுகிறது. மரங்கள் செடிகள் சூழலைப் பாதுகாக்கின்றன. அதனால் வட அமெரிக்க பூர்வீகக் குடி மக்கள் இயற்கையையும் மரம், செடி, கொடிகளையும் தெய்வமாக வணங்கி வழிபட்டனர்.

கடற்கரை ஓரங்களில் மரங்கள் செறிந்து இருந்த பகுதிகளில் அண்மையில் ஏற்பட்ட சுனாமியின் பாதிப்பு மிகக்குறைவு. உதாரணத்துக்கு வேப்ப மரம், வில்வ மரம், ஆல மரம், துளசிச் செடி, வாழை மரம் என்று ஒரு நீண்டபட்டியலைச் சொல்லலாம். அதில் ஆல மரத்தோடு வயதான முதியவர்களை ஒப்பிடுவர். காரணம் ஆலமரத்தின் விழுதுகள் மனித வாழ்வில் வாரிசுகளை ஒத்திருப்பதாலும் அப்படிச். செழித்து வளர்ந்த ஆலமரம் போல் மனித வாழ்வு அமையவெண்டும் என்பதே. சில மரங்கள் தல விருட்சங்களாக மதிக்கப்பட்டு வணங்கப்படுகின்றன. பிள்ளையில்லா தவர்கள் ஆல மரத்தைச் சுற்றி வந்து வணங்குவதுமுண்டு.

இயற்கையில் புதைந்துள்ள பல இரகசியங்களை மனிதன் இன்னும் கண்டுபிடிக்கவில்லை. இந்து மத வேதங்கள் இயற்கையின் இரகசியங்களை குறியீட்டு மொழி மூலம் எடுத்துச் சொல்லியுள்ளது. பஞ்சபூதங்கள் என்ற கோட்பாட்டின் மூலம் ஐந்து விதமான சக்தியின் நிலைகளை எடுத்துச் சொல்லியுள்ளது இந்துமதம். மனிதன் தான் வாழ்வதற்கான சக்தியினை இயற்கையில் இருந்து பெறுகிறான். ஆதனால் அதனை மதித்து வாழப் பழக வேண்டும். இல்லையேல் இயற்கை அவனை அழித்துவிடும்.

கட்டுரை

# இரு மொழியாளர்களும் மூளை வளர்ச்சியும்

அ. பொ. செல்லையா

மொழிகளைப் படிப்பதால் மூளையின் வளர்ச்சி கூடுகிறதென ஆய்வாளர்கள் கூறுகிறார்கள். அதனால் இரண்டொரு மொழிகளைப் படிப்பதால் மூளையின் திறன் கூடுவதாக விஞ்ஞானிகள் நம்புகின்றனர். இது புலம் பெயர்ந்து வாழும் தமிழர்களுக்குப் பெரும் பயன் தருவதாகும். புலம் பெயர்ந்த நாடுகளில் வாழும் தமிழர்கள், தாம் வாழுகின்ற நாட்டின் மொழியைத் தெரிந்திருத்தல் அவசியமாகிறது. முதியவர்களுக்கும் இது பொருந்தும். புலம் பெயர்ந்த நாட்டில் பிறந்தவர்கள் அந்நாட்டின் பிரசைகளாவர். அவர்களின் கல்விமொழி அவர்களின் முதல் மொழியாகிறது. தடுமாறி அதனைத் தாய்மொழி என்பாரும் உளர்! சூழ்நிலையால், அறியாமையால் ஏற்பட்ட தடுமாற்றமே அது.

அந்தந்த நாட்டுக் கல்விமொழி அவரவர் முதல் மொழியாகிறது. அதில் அவர்கள் நல்ல பயிற்சியும் தேர்ச்சியும் உடையவர்கள் ஆகிறார்கள். கல்விமொழி எதுவோ அதுவே அவர்கள் எண்ணப் பரிமாற்ற ஊடகமாக மாறுகின்றது. அதனால், அவர்கள் அவர்களின் கல்வி மொழியிலேயே பேசவும் செயற்படவும் செய்கிறார்கள். குழந்தைகளில் இது இயல்பானது, இயற்கையின் விதியும் அதுவே. தமிழருக்கும் இது பொருந்தும். ஆனால், இரண்டாவது ஒரு மொழியைப் படிப்பதால் மூளை கூடுதலாக வளருமானால் தமிழன் தமிழைப் படிப்பதால் மூளை வளரும் நிலை ஏற்படுமல்லவா?

'செந்தமிழும் நாப்பழக்கம்' என்பர்.

அதனால், படிப்பது மட்டுமல்ல, பேசவும் எழுதவும் வேண்டும். அதற்கு வீட்டில் தமிழில் கதைக்க, தமிழனைக் கண்டால் தமிழில் பேச, தமிழர் மன்றங்களைத் தமிழில் நடாத்த, தமிழர் கலை தமிழில் பயின்றிட, தமிழர் கலாச்சாரம் தமிழாய் மலர்ந்திட, தமிழர் சமயபூசை தமிழில் செய்திட முயலவேண்டும். எனவே, புலம் பெயர்ந்த நாடுகளில் தமிழ் வாழும் வளரும். வெவ்வேறு நாட்டில் வாழ்ந்தாலும், தமிழர் ஒருவருக்கொருவர்

சந்திக்கும்போது தமிழில் பேசி உறவுகளைப் பலப்படுத்திக் கொள்ள வேண்டும்.

இதற்கு, தமிழர் வம்சாவழி தமிழைப் படித்துக்கொள்ள வேண்டும். மொழிகளைப் படிப்பதால் மூளை வளர்ச்சியும் இருப்பதால் அதனைப் படிப்பதில் பயனும் இருக்கிறது. தாய்மொழி பலம் பெறுகிறது, தொடருகிறது.

இங்கிலாந்து, ஜெர்மனி, பிரான்ஸ், சுவிஸ், டென்மார்க், கனடா, இலங்கை, தமிழ்நாடு, மலாயா, சிங்கப்பூரொடு மற்ற நாடுகளில் வாழும் உறவுகள் சிலர் ஜெர்மனியில் ஒரு விழாவில் சந்தித்தால் எந்தப் பிரச்சனையும் இல்லாது தமிழில் உரையாடிடலாம். அல்லாவிடின் ஒருவருக்கொருவர் முழிக்க வேண்டி வரும். உடன் பிறப்பாகினும் பற்று வராது, பந்தம் வளராது. பேசிப்பழகினால், எண்ணப் பரிமாற்றங்களால் உறவு வலுப்பெறும், இனமானம் வளரும், தாய்மொழிப்பற்று ஓங்கும், தாய்நாட்டுப்பற்று இலங்கும்.

இனமானம் இலங்க, தமிழன் தமிழ் படிக்க வேண்டும். அதில் ஒன்றும் கடினம் இல்லை. அது இயல்பாக வரும், ஒன்று பரம்பரை, மற்றது இயற்கை!வேற்று மொழிகளைப் படிப்பது ஒன்றும் கடினமானது அல்ல! ஆறு மொழிகளைப் படித்துக்கொள்ள முடியும் என்பது உளவியலாளர் கருத்து. பத்து மொழிகளில் பயிற்சியுடையார் பலர் உண்டு. தவத்திரு தனிநாயகம் அடிகளாருக்குப் 16 மொழிகளில் தேர்ச்சி உண்டென்பர். 25 மொழிகளுக்கு மேல் தேர்ச்சியுடையாரும் உள்.

**தவத்திரு தனிநாயகம் அடிகளாருக்குப் 16 மொழிகளில் தேர்ச்சி உண்டென்பர். 25 மொழிகளுக்கு மேல் தேர்ச்சியுடையாரும் உள்.**

லண்டன் பல்கலைக் கழகக் கல்லூரி 105 பேரை ஆய்வு செய்தது, அதில் 80 பேர் இரு மொழி தெரிந்தவர்கள். மற்றைய மொழிகளைப் படிப்பவர்களுக்கு மூளையிலுள்ள சாம்பல்நிறப் பொருள் திரிந்த நிலையில் அதாவது கூடிக் காணப்பட்டுள்ளது. அந்தப் பகுதியிற்றான் செய்திகள் ஒழுங்கு செய்யப் படுகின்றன. பயிற்சி செய்யும்போது தசை வளர்வதுபோல, வேறு மொழிகளைப் பயிலும்போது மூளையில் வளர்ச்சி உண்டாகிறது.

அதிலும் இரண்டாவது மொழியை இளமையில் கற்றவரின் மூளையில், வளர்ந்த காலத்தில் கற்றவரின் வளர்ச்சியைவிடச் சாம்பல்நிறப் பொருள் அதிகமாக இருப்பதைக் கண்டுள்ளனர். தூண்டுதல் மூலம் மூளையின் அமைப்பு மாறுவதுண்டு என்பது விஞ்ஞானிகளுக்குத் தெரியும். ஆனால் மொழிகளைப் படிப்பதன் மூலம் மூளையின் அமைப்பு மாறுகின்றது என்பது இந்த ஆய்வினால் தெரிய வந்தள்ளது.

அறிவியல் என்பது கற்பனைக் கதையல்ல, அவை ஆய்வின் முடிபுகள், ஆதாரத்துடன் கூடியவை. அதனைப் பின்பற்றுவது உயர்ச்சி தரும். புலம் பெயர்ந்த நாடுகளில் தன் தாய்மொழியைப் படிப்பதால் வருவாய் இல்லாது போகலாம்! ஆனால், தாய்மொழி தரும் சுகம், மகிழ்வு தாய்பாலுடைய சுவையாகும். அதனைப் புட்டிப் பாலில் பெற முடியாது. தமிழைத் தமிழர் பயிலாதுவிட்டால் புலம்பெயர்ந்த நாடுகளில் தமிழ் ஆபிரிக்காவில் கயானா போன்றதாகிவிடும்!

புலம்பெயர்ந்த நாடுகளில் தமிழருக்குத் தமிழ் வருவாய் கொடுக்கிறது என்பது வெளிப்படையாக இல்லாத உண்மை! இளம் வயதில் இரண்டாவது மொழியைக் கற்பதால் மூளை வளர்ச்சி பெறுகிறது, மூளை வளரக் கல்வி வளரும், கல்வி வளரத் தொழில் நுட்பம் வளரும், தொழில் நுட்பம் வளரச் செல்வம் செழிக்கும்!

எனவே இரண்டாவது மொழியாகத் தன் தாய்மொழியைக் கற்பதன் மூலம் வருவாய் வருகிறது! சீனன் சீனமொழியைக் கற்கிறான், தமிழன் தமிழ் மொழியைக் கற்கலாமே! தயங்கலாமா? அந்தக் குழுவினர் செய்த ஆய்வில் 25 பிரித்தானியர் இரண்டாவது மொழி தெரியாதவர்கள், 25 பேர் இன்னொரு ஐரோப்பிய மொழியைப் 15 வயதிற்குமுன் பயின்றவர்கள், மற்றும் 33 பேர் இரு மொழியாளர்கள் 10 க்கும் 15 வயதிற்கும் இடையில் படித்தவர்கள் இருந்தனர்.

இரு மொழியாளர்களின் மூளையிலுள்ள சாம்பல்நிறப் பொருளின் செறிவு அவர்களின் இடது பக்க மூளையில் அதிகமாகக் காணப்பட்டுள்ளது. அந்தச் செறிவும் சின்ன வயதில் இரு மொழியைத் தெரிந்தவர்களில் கூடிய தெளிவாக இருந்ததாக அவதானிக்கப் பட்டுள்ளது. அதாவது, குழந்தை பேச ஆரம்பிக்கிற காலத்திலேயே இருமொழி கற்பாரின் மூளையின் வளர்ச்சி கூடுகிறது.

இந்த ஆய்வு 22 இத்தாலியர்களிலும் மேற்கொள்ளப்பட்டது. அவர்கள் ஆங்கிலத்தை இரண்டாம் மொழியாக 2 தொடக்கம் 34 வயதுக்கிடையில் கற்றவர்கள். லண்டன் ஆய்வுபோலவே ஆரம்பக் கற்றலின் மூளை வளர்ச்சி அதிகமாகக் காணப்பட்டுள்ளது. எனவே, ஆரம்ப காலத்தில் கற்றவர்களின் மூளை வளர்ச்சி விசாலமாக இருப்பது தெரிகிறது. அதிலும் 5 அல்லது 10 வயதுக்கு முன்னர் கற்றவர்களினதின் ஓட்டம் அதிகமாகவே உள்ளது. இதற்கு மாறுபட்ட கருத்துக்கள் சில உண்டெனினும், பல சாதகமாகவே உள்ளன. 2010 தில் எல்லா ஆரம்பப் பாடசாலைகளிலும் லண்டனில் மொழிகள் கற்பதற்கு வசதிகள் உண்டாக்கப்பட உள்ளன.

அதாவது, லண்டனில் குழந்தை, மொழிகள் படிக்கப் போகிறது! புலம்பெயர்ந்த நாடுகளில் தமிழ்க் குழந்தைகள் எல்லாம் தமிழைப் படிக்குமா? படிக்க வேண்டும். மொழியைப் படிப்பதற்கு ஆர்வம் வேண்டும். எனவே, தாய்மொழியிலுள்ள இன்பம் வேற்று மொழிகளில் இல்லை என்பதை உணர்ந்து தமிழர் தமிழைப் பயில வேண்டும்.

# ஜனனம்

பவளமணி பிரகாசம் – தமிழ்நாடு

கலியாணச் சந்தடியிலிருந்து விடுபட்டு, நண்பர்கள் உறவினர்கள் கேலிப்பேச்சுக்கள் காதுக்கெட்டாத தூரத்தில் அவனும், அவளும் அந்த மலைவாசஸ்தலத்தை அடைந்தனர். குறுகுறுப்புடன் அவளும், குதூகலத்துடன் அவனும் புதியதோர் உலகில் அடியெடுத்துவைத்தனர். புதிய பாடத்தை உவகையுடன் படிக்க ஆரம்பித்தனர். மணமேடையில் இணைந்து நின்ற போதிருந்த நெருக்கம் சுற்றியிருந்த கூட்டத்தால் கட்டுப்பாட்டைக் காத்தது. அப்போது சீசன் முடிந்திருந்த காரணத்தால் சந்தடியில்லாதிருந்த அந்த குளு குளு நகரம் இளஞ்சிட்டுகளின் தேனிலவுக்குத் தங்கு தடையற்ற சுதந்திரத்தை அள்ளி வழங்கியது. தனிமைத் தேனை அவனும் அவளும் துளித்துளியாய் சுவைத்து மகிழ்ந்தனர். அர்த்தமேயில்லாத பேச்சுக்கள். அர்த்தம் நிறைந்த பார்வைகள். அர்த்தமே இல்லாத சிணுங்கல்கள். அர்த்தம் நிறைந்த தேடல்கள். அர்த்தமே இல்லாத சிரிப்புகள். அர்த்தம் நிறைந்த மௌனங்கள்.

**“என்னைப் பொறுத்தமட்டில் மரணம் சாதாரணமானது. ஆனால் ஜனனம் உன்னதமானது.” ஒரே பிடிவாதமாய் இருந்தாள் அவள்.**

பறவையினங்களின் கீதத்தில், பல வண்ணப் பூக்குவியலிலே, எங்கும் எதிலும் உல்லாச உலகமே இயங்குவதாய் உணர்ந்து கிறங்கினார்கள். சிருஷ்டியின் தேவரகசியத்தை உணர்ந்து சிலிர்த்தார்கள். நேற்றுவரை அந்நியனாய் இருந்தவனுடன், நிறமற்ற மழைநீர் செம்மண்ணில் விழுந்தும் செம்புலனான கதையாய் தான் கலந்த விதத்தை எண்ணியெண்ணி வியந்தாள் அவள்.

ஆட்கொண்டவனே அடிபணிந்தவனும் ஆகும் அதிசயத்தை அனுபவித்தான் அவன். வருங்காலத்தின் வரைபடத்தை வார்த்தைகளில் வரைந்தார்கள்.

“நீங்கள் ஆம்பிள்ளைன்னு திக்கம் பண்ணுவீங்களா, அல்லது என் பேச்சைக் கேட்பீங்களா”?

“மகாராணியின் பேச்சுக்கு மறுபேச்சு கிடையாதம்மா”

“ஐயோ அடிமைத்தனமாய் தலையாட்டிக்கிட்டே இருந்தா எனக்கு பிடிக்காதப்பா.”

“யாரும் யாருக்கும் அடிமையில்லை. பெண் வர்க்கம் தலைநிமிர்ந்து நடந்ததாய் சரித்திரம் சொல்லுது.”

“நான் சர்வாதிகாரியாக மாறமாட்டேன்னு நினைக்கிறீங்களா?”

“நம்பிக்கைதான் பெண்ணே”

“ஆனாலும் இவ்வளவு நம்பிக்கை ஆகாதய்யா”

“ஆண்டவனே பெண்ணை நம்பித்தான் சிருஷ்டிப் பெட்டகமாக பெண்ணை உருவாக்கியிருக்கிறப்போ சாதாரண ஆண் நான் உன்னைநம்பக் கூடாதா?”

“ஓ! மங்கையராகப் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திட வேண்டுமம்மான்னு கவிமணி பாராட்டியதும் இதற்குத்தானோ?”

புல் வெளியில் புரண்டு கொண்டு மலைமுகட்டை தழுவி நழுவும் மேகக்கூட்டத்தை ரசிப்பது சுகமாயிருந்தது.

“அந்த மேகங்கள் ஏன் அந்த மலையுச்சியிலே உலாவுதப்பா?”

“விஞ்ஞான விளக்கம் வேண்டுமா, கவிஞனின் கண்ணால் பார்த்து சொல்லவா?”

“விஞ்ஞானியும் கவிஞனும் விரோதிகளா? ”

“போடி பைத்தியமே! சத்தியத்தை நித்தியத்தை வெவ்வேறு கோணத்தில் பார்த்தால் விரோதியாவார்களாடி? சிருஷ்டியின் விந்தையை இருவரும் இரண்டு விதத்தில் மொழிபெயர்ப்பவர்களடி. ஆண்டவனின் படைப்பின் ரகசியத்தை தரிசித்த கணத்தில் உணரும் அற்புத பேருவகை ஒன்றேதான்.”

“ஒரு பெரிய ஏற்பாட்டின்படி அழகான, அளவான அங்கம்தான் ஒவ்வொரு ஜீவனும்ன்னு விளங்குதப்பா”

கன்னத்தோடு கன்னம் உரச காதோடு கிசுகிசுத்தான். “எனக்கு உடனே குழந்தை வேண்டும் கண்ணே”

“ஒரு பத்துமாதம் காத்திருக்க முடியுமா கண்ணா”?

“சொன்ன பேச்சைக் காப்பாத்தினாச் சரி”

*****

அவள் அவனுக்கு கொடுத்த வாக்கை காப்பாத்தினாள். குழந்தை பிறந்தது. வளர்ந்தது. பள்ளிக்கும் போனது. மாலையில் தந்தை அலுவலகத்திலிருந்து வந்ததும் மடியேறி அமர்ந்து மழலை மொழியில் தன் சின்ன உலகத்துச் சேதியெல்லாம் செப்பியபோது மனமெல்லாம் இனித்தது. இனிய இல்லறம் இப்படிச் சென்றிருந்தால் தேவலையே.

தெளிந்த வானில் மேக மூட்டம் தோன்றியது. அவள் தேகம் மெலிந்து சோகமாய் மெலிந்து வரக் கண்டான் அவன். சீக்கிரமே அவள் களைத்துப்போவாள். மாதவிலக்கில் பிரச்சனைகள். இருவரும் போய் நல்ல பெண் டாக்டரிடம் காட்டினார்கள். பலவித பரிசோதனைகளுக்குப் பின்னர் கருப்பைப்பையில் கட்டி எனக் கண்டுபிடிக்கப்பட்டது. உடனடியாக அறுவைச் சிகிச்சை அவளுக்கு செய்யப்பட்டது.

“இனிமேல் பயமில்லை, மாமூலான வாழ்க்கை

நடத்தலாம். ஆனால் மீண்டும் கருத்தரிக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டியது அவசியம்.'' என்று எச்சரித்தாள் டாக்டரம்மா. சிலகாலம் குடும்ப வாழ்க்கை பிரச்சனையில்லாமல் சென்றது. மீண்டும் அவள் நோயுற்றாள். எவ்வளவு ஜாக்கிரதை யாகயிருந்தும் அவள் மீண்டும் கருவுற்றாள். அதோடு மீண்டும் புற்று வளர்ந்து முதுகுத்தண்டைத் தாக்கத் துவங்கியிருந்தது..

''இந்தக் கருவை உடனடியாக கலைத்துவிட வேண்டும். அடுத்து கதிர்சிகிச்சையும், அறுவைச் சிகிச்சையும் செய்தால் எல்லாம் சரியாகிவிடும்.'' என்றார் டாக்டர்.

''பிளீஸ், டாக்டரம்மா, கருவை கலைக்கச் சொல்லாதீர்கள். நீங்கள் சொல்லும் சிகிச்சைகள் கருவில் வளரும் சிசுவை பாதிப்பதாகயிருந்தால் எனக்கு அவை வேண்டவே வேண்டாம்.'' என்றாள் அவள்.

டாக்டர் அதிர்ந்து போனார். ''என்னம்மா சொல்கிறாய்? உன் உயிருக்கு ஆபத்து வந்திருப்பதை நீ உணரவில்லையா?''

''டாக்டர் எனக்கு என் உயிர் பெரிசில்லை. வளரும் சிசுவின் உயிர் தான் அதைவிட முக்கியம். அதைக் கொல்லுவதை என்னால் நினைத்துக் கூடப் பார்க்க முடியாது''

''பைத்தியம் மாதிரி உளறாதே. உண் கணவனையும் உன் மூத்த குழந்தையும் எண்ணிப் பார்த்தாயா?. அவர்களுக்காக நீ வாழ வேண்டாமா?''

'' அவர்களை ஆண்டவன் பார்த்துக் கொள்வான். ஏன் வயிற்றிலுள்ள சிசுவுக்கு நான்தான் ஆதரவு. நான் வாழும் ஒவ்வொரு நாளும் அதன் வாழ்வில் இன்னும் ஒரு நாள்.''

'' நீ சிகிச்சைக்குப் போகாவிட்டால் நிச்சயம் இறந்து போவாய். பிறக்கும் போது குழந்தையும் தன் சகோதரனோடு சேர்ந்து தாயற்ற அநாதையாகத் தவிக்கும். இதையெல்லாம் யோசித்து நல்ல முடிவு எடு.''

''டாக்டர், இதில் இனிமேல் நான் யோசிப்தற்கு ஒன்றுமிலலை. என் முடிவில் மாற்றமும் இல்லை''

''சொல்வதைக் கேள். பலாபலன்களை பற்றி சிந்திக்காமல் செயல்படாதே''

''என்னைப் பொறுத்தமட்டில் மரணம் சாதாரணமானது. ஆனால் ஜனனம் உன்னதமானது.'' ஒரே பிடிவாதமாய் இருந்தாள் அவள். அவனும் அவளிடம் எவ்வளவோ மன்றாடிப்பார்த்தான். பயனில்லை. வலியை மறக்க அவ்வப்போது மருந்து எடுத்துக்கொண்டாள். வைராக்கியத்தோடு நோயுடன் போராடியவள் ஒருநாள் வலிதாங்க முடியாமல் கோமாவில் விழுந்தாள்.

டாக்டர்கள் பெரிய உயிரா, சின்ன உயிரா என்று யோசித்த வேளையில் அவன் அவளுக்காக. அவளது தவத்தை கூடவே இருந்து பார்த்த நினைவில், குழந்தையைக் காப்பாற்றித் தரும்படி டாக்டர்களிடம் வேண்டினான்.

அவளது உயிர்ப்பறவை உடலெனும் கூட்டை விட்டு பறந்த வேளையில் புதிய ஜீவனின் பூபாளம் கேட்டது.

(பல வருடங்களுக்கு முன்பு ஹிந்து பேப்பரில் வெளியான ஒரு இத்தாலியப் பெண்ணின் உண்மைக்கதையே இக்கதையை நான் எழுத தூண்டுகோலாய் அமைந்தது)

# பூமியின் சரித்திரத்தில் ஏற்பட்ட அனர்த்தங்கள்

இளையபிரான்

உலகத்தின் கண்டங்கள் நிலையானவை என்றாலும் அவை ஒரே இடத்தில் அசையாது இருப்பதாகவோ, இருந்ததாகவோ எண்ண இடமில்லை. அவை சமுத்திரத் தரைகளில் உள்ள பள்ளத்தாக்குகளிற்கு இணைய மேலும் கீழும் அசைந்துள்ளன. இந்த அசைவுகளின்போது அவை கடலில் மூழ்கியும் கடல் அவற்றிலிருந்து விலகியும் உள்ளது. எப்படியிருந்தாலும் பக்கவாட்டில் அவை நகரவில்லை. சமுத்திர பள்ளத்தாக்குகள் நிரந்தரமற்றவை என்பதை புவி அறிவியலாளர்கள் கண்டறிந்துள்ளனர். 150 மில்லியன் ஆண்டுகளுக்கு மேற்பட்ட வயதுடைய சரித்திரத்திற்கு முந்திய எச்சங்கள் சமுத்திரத்தின் அடியிலிருந்து கண்டெடுக்கப்படவில்லை. இவை நிலத்தட்டுகள் (earth's tectonic plates) உராயந்ததில் அழிந்து போயிருக்கலாமென நம்பப்படுகிறது. உலகின் சாதாரண வளர்ச்சியைத் திரும்பத்திரும்ப ஏற்பட்ட சுற்றாடல் மாற்றங்கள் தடைசெய்துள்ளன. இதனால் அனர்த்தங்கள் ஏற்பட்டு புவியின் உயிரினங்களும் தாவரங்களும் அழிந்து போயிருக்கலாம்.

இறுதியாக 65மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னர் கிறேற்றேஷியஸ் காலத்தின் (Cretaceous Period) முடிவில் அப்படியான அனர்த்தம் ஏற்பட்டது. இந்த அழிவு ஒரு பாரிய விண்ணுலக (புவிசார்பற்ற) பொருள் பூமியுடன் மோதி வெடித்ததினால் ஏற்பட்டது என நம்பப்படுகிறது. இந்த அனர்த்தத்தினால் டைனசோர்கள் (dinsaurs) திடீரென அழிந்தன என்பது குறிப்பிடத்தக்கது. இந்த முடிவுகளுக்கு ஆதரவான கருத்துக்களும் எதிரானவையும் வெளியாகியுள்ளன. சிலர் இந்த வாக்குவாதங்களை ''விஞ்ஞானம் பைத்தியமாகிவிட்டது'' எனக் கூறினர். இந்த விவாதங்களின் பயனாக சகல விஞ்ஞானக் கிளைகளிலுள்ளவர்களும் அதில் ஈர்க்கப்பட்டனர். புவியியலாளர்கள், பழம்பொருளாய்வாளர்கள், மட்டுமன்றி விண்கோள் ஆய்வாளர்கள், எல்லோரும் இவ்விவகாரத்தில் விவாதங்களில் ஈடுபட்டுள்ளனர். கிறேற்றேஷியஸ் அனர்த்தத்தினால் புவி அழிந்ததோ இல்லையோ புவியின் நீண்ட சரித்திரத்தில் பல தடவைகள் விண்ணுலகப் பொருட்கள் மோதி வெடித்துள்ளன என்பது தெளிவாகியுள்ளது. விண்கற்கள்,

குறுங்கோள்கள், வால்நட்சத்திரங்கள் இடையறாது விண்ணில் சுற்றிக்கொண்டிருக்கின்றன. அவை பூமியைத் தாக்கவில்லை என்று எண்ணுவதற்கிடமில்லை. விண்கல் தாக்கத்தினால் ஏற்பட்ட மோதலினால் உண்டான பள்ளங்கள் பூமியில் மிகவும் அருமையாகவே உள்ளன. உதாரனத்துக்கு கனடா ஒன்றாரியோ மகாணத்தின் வடக்கில் உள்ள சட்பரி ( Sudbury) என்ற நகருக்கு சில மைல் தூரம் வடக்கே உள்ள 56 மைல் நீளமான பள்ளத்தாக்கு, எரிகல் வந்து பூமியில் இரண்டு மில்லியன் ஆண்டுகளுக'கு முன்னர் மோதியதால் ஏற்பட்டதாக புவியியல் ஆராய்ச்சியாளர்கள் கருத்து. இதனால் அப்பகுதியில் தங்கம், நிக்கல், செம்பு போன்ற உலோகப் பொருட்கள் கிடைக்கின்றன. உலகத்திலேயே நிக்கல் கூடியளவு உள்ள பகுதி சட்பரி பகுதியாகும். இவை உள்ள பள்ளங்களில் எரிமலையோ பூகம்பத்தின் அறிகுறிகள் இல்லை. இவை குறுங்கோள்களினால் ஏற்பட்ட வடுக்கள் என்றும் வேறு பெயர்களினாலும் குறிப்பிடப்படுகின்றன. இவற்றில் சிலவாவது வால் நட்சத்திரம் அல்லது குறுங்கோள்கள் மோதியதினால் ஏற்பட்டவை என்பதை மறுக்க இயலாது.

சில காலங்களில் சர்வலோக ரீதியாக புவியை வெள்ளம் அழித்ததும் உண்டு.1980 வரையும் கழிந்த 35 ஆண்டுகளில் 1.2 மில்லியன் மக்கள் இயற்கை அழிவுகளினால் உயிரிழந்துள்ளனர். இத்தொகையில் 37% விகிதமானோர் பூகம்பங்களினால் இறந்தனர். 16% விகிதமானோர் வெள்ளத்தினால் மரித்தனர். நீண்ட காலத்தில் வெள்ளங்கள் மக்களின் உயிர்களைப் பலிகொண்டதில் முக்கிய பங்கு வகித்துள்ளன. 1642 முதல் 1973 வரைக் காலத்தில் 4.9 மில்லியனுக்கு மேற்பட்டோர் வெள்ளங்களில் மாண்டனர். மிகவும் மோசமானதாகக் கணிக்கப்படும் வெள்ளம் சீனாவின் மஞ்சள் ஆற்றின் கரைகளில் ஏற்பட்டது. 1931 ஆகஸ்ட் (August) மாதத்தில் ஏற்பட்ட வெள்ளத்தில் 3.5 மில்லியன் உயிர்கள் இழக்கப்பட்டன. 1887ல் 900,000 பேர் உயிரிழந்தனர். இந்த அனர்த்தங்களைவிட கோரமான அழிவுகள் ஏற்பட்டதாக பலதரப்பட்ட மதங்களின் பாரம்பரியக் கதைகள் கூறுகின்றன. இந்த முறையில் பைபிளில் கூறப்படும் நோவாவின் வெள்ளம் குறிப்பிடத்தக்கது ஏனெனில் அது புவியறிவியலின் ஆரம்ப காலத்தில் விஞ்ஞானத்தில் தனது தடயங்களை விட்டுள்ளது. நோவாவைப்பற்றிய கதைகள் பாபிலோனியாவில் (Babylonian) கில்கமேஷ் (Gilgamesh) காவியங்களைத் தழுவியதாகத் தோன்றுகிறது. அஷுர்பாணிப்பால் (Ashurbanipal) நூலகத்திலிருந்து பெறப்பட்ட களிமண் வில்லைகளில் கில்கமேஷ் வீரச்செயல்கள் பொறிக்கப்பட்டிருந்தன. கில்கமேஷ் ஒரு தெய்வீக மானிடர். அவருடைய தாய் ஒரு தெய்வம், தந்தை மானிடர். அவர் கூறிய ஆழிப்பேரலைபற்றிய கதை வருமாறு:



ஆழிப்பேரலைக்கு முன்னர் புவியில் மக்கள் மிகவும் தொகையாக வாழ்ந்தனர். அவர்கள் உண்டாக்கிய ஓசையினால் புவி, காற்று, மூச்சுவிடும் சுவாசம் ஆகியவற்றின் தெய்வமாகிய என்லில் தூங்க இயலாதுபோய்விட்டது. அதனால் மனித இனம் நீரில் மூழ்கடிக்கப்பட்டு கொல்லப்படவேண்டுமென்று ஏனைய தெய்வங்களிடம் வேண்டினார். ஆனால் இயா (Ea) என்ற அறிவுக்கடவுளும் மனிதர்களைப் படைத்தவர்களில் ஒருவருமானவர், உற்னபிஷ்டிம் (Utnapishtim) என்ற மானிடரின் சொற்பனத்தில் தோன்றி இதை அம்பலப்படுத்தினார்.அவருடைய வீட்டை உடைத்துவிட்டு ஒரு தோணியைக் கட்டும்படி கனவில் அவருக்குத் தெய்வீகக் கட்டளை கிடைத்தது. ஆறு நாட்களில் குடுமபத்தவர், கைத்திறன் தொழிலாளர்களின் உதவியுடன் தோணி கட்டப்பட்டது. ஆறு சதுர தட்டுகளைக் (decks) கொண்டது அத்தோணி. உற்னம்பிஷ்டிம் தனது குடும்பத்தினர், இனத்தவர்கள், கைத்திறன் தொழிலாளர்கள், வீட்டு மிருகங்கள காட்டு மிருகங்கள் அத்துடன் தங்களுக்குத் தேவையான பொருட்களையும் தோணியில் ஏற்றினார். ஆறு பகலும் இரவுமாக மழை பெய்து கொட்டியது. பள்ளத்திலிருந்து மேலே நீர் ஊற்றெடுத்தது. தெய்வங்கள்கூட பீதியடைந்தனர். ஏழாம் நாள் மழை ஓய்ந்தது. தோணி நிஸீர் மலையில் தரை தட்டியது. உற்னபிஷ்டிம் ஒரு புறாவை வெளியில் அவிழ்த்துவிட்டார். குந்த இடமில்லாமல் அது கப்பலுக்குத் திரும்பியது. அதைத்தொடர்ந்து தூக்கணாங்குருவி ஒன்றை விட்டார். புறாவைப்போன்று அதுகும் திரும்பியது. பின்னர் ஒரு காகத்தை விட்டார். காகம் திரும்பவில்லை.

உற்னபிஷ்டிம் மலை உச்சிக்குச் சென்று தெய்வங்களுக்கு பலி கொடுத்து பானத்தையும் ஊற்றினார். நறுமணத்தை மணத்த தெய்வங்கள் ஈக்கள் போன்று அங்கு வந்தனர். என்லில் மானிடர்கள் உயிருடன் தப்பியதைக்கண்டு ஆத்திரமடைந்தார். இயா அவருடைய கோபத்தைத் தணித்தார். கோபம் தணிந்த என்லில் உற்னபிஷ்டத்தையும் அவனுடைய மனைவியையும் ஆசீர்வதித்து ஆற்றுப் படுக்கையில் வாழ இறவா வரமும் கொடுத்தனுப்பினார். இக்கதை கி.மு 3400 களில் சுமேரியாவில் ஆரம்பமானது எனவும் கூறுவர். புவியியலாளர்கள் ரைகிறிஸ் - யூபிறிற்றஸ் நதியின் படிமங்களை ஆராயும்போது கி.மு 4000ங்களில் பெரும் வெள்ளம் உண்டாகியிருந்ததற்கு ஆதாரங்களைக் கண்டுள்ளனர். இவ்விதமாக பெருவெள்ளத்தைப்பற்றி மெஸப்பொற்றேமியாவில் ஆரம்பித்த பாரம்பரிய கதைகள் நாட்டுக்கதைகளுடன் கலந்துவிட்டன.

இதேபோன்று சைவ மதத்தில் பெரு வெள்ளத்தில் உலகம் அழிந்ததும் படைக்கும் கடவுள் பிரமா ஆலிலை ஓடத்தில் வந்து உலகத்தைப் படைத்ததாகக் கதை உண்டு.

பூகம்பங்கள் நிலங்களும் கடல்களும் தொடர்பு அறக் காரணமாயிருந்ததாக எண்ணப்படுகிறது. அல்ப்ஸ் போன்ற மலைகள் பாரிய பூகம்பத்தினால் மேலுக்கு எறியப்பட்டதாக எண்ண இடமுண்டு. உலகின் மேற்பரப்பு ஒழுங்கற்று இருப்பதற்கு பூகம்பங்கள் காரணமாகும் என்று சில புவியியலாளர்கள் கருதினர். இப்படியான இடம்பெயர்வுகளினால் முன்பு கடலாயிருந்த இடங்கள் பூமியாக மாறிவிட்டன. இதனால்தான் கடல்வாழ் உயிரினங்கள் கண்டங்களில் கல்லாய்ச் சமைந்து காணப்படுகின்றன. இது பிரித்தானியத்தீவுகள் முழுவதுமில்லாபோனாலும் பகுதிகளாவது கடலின்கீழ் அமிழ்ந்திருந்ததென்பதைக காட்டுகின்றது.

2005ம் ஆண்டு மார்கழி 26 எங்கள் வாழ்க்கையில் மறக்கமுடியாத வகையில் சுனாமி பூமியைத் தாக்கியது. பல ஆயிரம் மக்கள் உயிரிழந்தனர். அதைவிடக் கூடுதலான எண்ணிக்கையில் மக்கள் ஊனமடைந்தனர். பல பில்லியன்கள் பெறுமதியுள்ள சொத்துக்கள் நாசமாகின.சுமாத்திராவில் ஏற்பட்ட 9.0 ரிட்சர் அலகு உடைய பூகம்பம் சமுத்திரத்தை நிலைகுலையச் செய்தது. கடல்பள்ளத்தில் ஏற்பட்ட பாதிப்பினால் ஏனைய கண்டங்களுக்கு நீர் பரவியது. நாடுகளின் கரையோரப் பகுதிகள் விழுங்கப்பட்டன. அப்பகுதியில் அடிக்கடி இந்து சமுத்திரத்துக்கு கீழ் பூகம்பம் தோன்றுவதை நாம் அவதானிக்க கூடியதாயிருக்கிறது. சமுத்திரத்துக்கு கீழ உள்ள இந்தோ பர்மா நிலத்தட்டுகள் அமைதியான நிலையில் இல்லை. அந்தமான் தீவுகள் அருகேயும் பூகம்பங்கள் அடிக்கடி தோன்றுவதால் இந்தியாவின் கிழக்கு கரையோரப் பகுதியும் இலங்கையின் கிழக்கு, தெற்கு, தென் மேற்கு கரையோரப்பகுதிகளும் பேரலைகளின் தாக்குதல்களுக்கு உட்படலாம் என்பது புவியியல் ஆராச்சியாளர்கள் கருத்து. சுமாத்திராவுக்கு அருகேயுள்ள கரகட்டோவா என்ற எரிமலை 1815ம் ஆண்டில வெடித்ததினால் பேரலைகள் தோன்றி ஸ்ரீலங்காவின் தென்பகுதி பாதிப்புக்குள்ளாகியது.

இயற்கையின் பெரு வலியை மனிதன் உணராமலில்லை. ஆனால் இறக்கும்வரை ஆசைகளும் அவனை ஆட்டிப்படைக்கின்றன. ஆசைகள் அழிந்தால் மனிதத்துக்கு அழிவில்லை.



# சுமைதாங்கி

கவிஞர் முத்துராஜா

பேதைப் பெண்களின் கரங்கள்
ஏந்தியப் பூக்கூடைகள்
பெதும்பைகள் கரங்களில்
எரியும் குத்துவிளக்குகள்.
அலங்காரப் பட்டுப்புடவையில்
புது மங்கை நடுப்பாதையில்

மடந்தைகளும் அரிவைகளும்
ஏந்திய தட்டுகளுடன்
முகில் அலையில் மிதந்து
பூக்கொத்து மேடையை நோக்கி
அசைகின்றனர்
சிதறி எழுகின்றது வெள்ளி
முத்தாப்பு வர்ணச் சுடர்

ஆராத்தி எடுப்பர்
குரவை இசை பாடுவர்
கொஞ்சுவர் இருகன்னங்களில்
ஆண்டாள் மாலையும்
ஆள் உயரப் போடுவர்

சுயம்வரத்தில் நிற்கும்
தமையந்தியின் மகரந்தத்தில்
மொய்க்கும் தேனீக்கள்

விரித்த ஐந்து மாவிலையில்
உட்கார்ந்து நிமிரும் தேங்காயை
புனித நீர் நிறைந்த வெள்ளிச்செம்பு
பொறுமையுடன் தாங்கி நிற்கும்,
ஏந்தி நிற்கும்
பெண்மையின் மென் விரலகள்

சிரசில் உச்சி வரிக்கோடுகள்
அடுக்கித் தொங்கும் ஆபரணங்கள்

தலையில் பாரம்
கழுத்தில பாரம்
கையிலும் பாரம்.

# RAAM NAGALINGAM

## INDEPENDENT INSURANCE BROKER

- **Individual Life Insurance**
- **Group Insurance**
- **Disability Income Plan**
- **Visitor or Travel Insurance**
- **Critical Insurance - Cash while you are alive**
- **Mortgage Insurance**
- **Seg-Funds - 100% Guaranteed on Death or at maturity**
- **Medical Insurance Plan for New Immigrants**
- **Health Insurance for those who are not covered by OHIP**
- **RESP - 20% Govt. Grant - Maximum $400**



உங்கள் பிள்ளைகள் உயர்வகுப்பு படிப்பை முடித்துவிட்டு வெளியே வரும்போது ஒரு கடனாளியாக வராமலிருப்பதற்கு வழியுண்டு. மத்திய அரசின் **$400** மானியத்தை முழுவதுமாகப் பெற்றுக் கொள்ள பூரண விளக்கம் தேவையா? அத்துடன் சகல காப்புறுதி பற்றிய விளக்கத்திற்கும் அழையுங்கள் உங்கள் நண்பன்

**ராம் நாகலிங்கம்**

**Friendly Service - Satisfaction Guaranteed**

ALL KINDS OF LOANS ARRANGED

**"All Agents are Equal
But the service rendered by each
agent makes the difference"**

Home: **905.654.3609**
Office: **905.762.1288**
Mobile: **416.804.0283**
Fax: **905.654.7077**

AIG / Norwich Union
Canada Life
GLOBAL
R.B.C. Insurance
ZURICH

Equitable Life
Liberty Health
Maritime Life
TRANS AMERICA
T.I.C.

TriMark
AGF / AIM
Mackenzie

# தமிழிலே வேதாந்தம் - பகுதி 2

சாலையூர்ச் செல்வன்



சின்மய முத்திரையின் சிறப்பு மிக்க தத்துவம்

"குருவில்லா வித்தை குருளிவித்தை" என்பார்கள். அந்த வகையில் வேதாந்தத்தைச் சிறிதளவேனும் என் அறிவிற்கு எட்டிய அளவு புரிந்து கொள்ள என் ஆசானாக அமைந்தவர் குரு சின்மயானந்தஜி அவர்களே. அவர்கள் அகில உலகமெங்கும் வேதாந்த அறிவைப்பரப்ப நடாத்திய "ஞான யக்ஞங்க"ளும் எழுதியருளிய நூல்களும் அனந்தம். அதே போல் அவரின் விவேகமிக்க சொற்பொழிவுகளை நேரிலே கேட்டும் ஆங்கிலத்தில் அவரால் எழுதப்பட்ட நூல்களைக் கற்றும் பலனடைந்தோர் ஆயிரம் ஆயிரம். அவர்களில் சிலர்கூட இத்தொடரை வாசிக்க நேரிடலாம். குற்றம் குறைகளிருப்பின் மன்னிக்க வேண்டுகிறேன்.

ஆங்கிலம் கற்க வாய்ப்பிழந்த அநேகம் தமிழ்மக்கள் அந்த மகான் அருளிய அரும்பெரும் தத்துவங்களைப் பற்றிச் சிறிதளவேனும் தெரிந்து கொள்ளும் நோக்கோடு ஆயிரமாயிரம் ஆண்டுகட்கு முன்னாலேயே நம் தமிழ் ஞானிகள், சித்தர்கள், பக்தகோடிகள் கூறிவைத்தவைகளையும் மேற்கோள் காட்டி எழுதப்பட்டவையே இக்கட்டுரைகள். மரபு வழிபற்றி முடிந்தவரை இலக்கண வழுவின்றி வசன நடையில் எழுத எடுக்கப்பட்ட ஒரு முயற்சி.

ஒரு சில மூர்த்தி சிலைகளில் வலது கைப்பெருவிரலையும் ஆள்காட்டி விரலையும் ஒன்றாகத்தொட்டு மற்றைய மூன்று விரல்களையும் தனித்தனியாகப் பிரித்துக்காட்டி யிருப்பதுவே சின்மய முத்திரை எனக்கூறுவார்கள். இடது கை எதற்கும் அஞ்சேல் என அபய கரம் காட்டி நிற்கும். சுவாமி சின்மயானந்தா அவர்கள் இம்முத்திரைக்கு விளக்கம் கூறும் போது கீழ்க்கண்ட வாறு கூறினார்.

ஒருவர் மேடையில் பேசும்போதோ வேறெங்கும் பேசும்போதோ தன்னைக்குறிப்பிட நேரும் போது தன் பெருவிரலை நெஞ்சில் வைத்துச்சுட்டிக்காட்டுவார். அதைப்போல் முன்னால் நிற்பவரைக்குறிப்பிட நேரின் சுட்டு விரலால் சுட்டிக்காட்டுவார். ஆகவே இறைவன் " நீயும் நானும் ஒன்றுதான். நம்மைப்பிரித்திருப்பது மற்றைய மூன்று விரல்களும் சுட்டிக்காட்டும் ஆணவம், கா்மம், மாயையாகிய மும்மலங்களே" என்பதை விளக்குகிறது இம்முத்திரை எனக் கூறியுள்ளார்.

இதிலே நாம் கவனிக்க வேண்டிய ஒரு விடயம் யாதெனின் ஆணவம், கா்மம், மாயை என இவைகளை வரிசைப் படுத்தியிருக்கும் முறையையே. அறிவு ஜீவிகளான நம் முன்னோர் அறம், பொருள், இன்பம - காமம், கொலை, கள், களவு, சூது - மெய், வாய், கண், மூக்கு, செவி - எனச் சில விடயங்களை வரிசைப்படுத்தி விட்டு, "நடுவணது எய்த இருதலையும் எய்தும்" என்றும் கூறிவைத்துப் போயிருக்கிறார்கள். பொருள் இருந்தால் தான் அறம் செய்யலாம், இன்பம் துய்க்கலாம். கள் ஆகிய மதுவையுட்கொண்ட பின்பே மயங்கிய மனம் மற்றைய பாதகங்களைச் செய்யத் துணிகிறது. பஞ்சேந்திரியங்களில் கண்ணே அதி முக்கியமானது. அந்த வகையில் பார்க்கும் போது நடுவில் வரும் கா்மமே நம் ஆணவத்துக்கும் மாயைக்கும் காரணியாகிறது. கா்மம் என்பது எமது முற்பிறவிகளில் நாம் செய்த நல்வினை தீவினைகளுக்கேற்ற எம்முள் நிறைந்திருக்கும் ஆசைகள் அல்லது அவாக்களே. என் குருவானவர் இதை விளக்க ஒரு சமன்பாட்டையே கூறியிருந்தார். அதாவது :

ஆண்டவன் + ஆசைகள் = சீவன்

ஆகவே, ஆண்டவன் = சீவன் - ஆசைகள்

இந்தக் கருத்தையே திருவள்ளுவப் பெருந்தகை கூறவரும்போது

"அவா வென்ப தெவ்வுயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவா அப் பிறப் பீனும் வித்து." என மிகவும் தெளிவாக எடுத்தியம்பி யுள்ளார்.

திருமூலநாயனார் இன்னும் தெளிவாக அவர் அருளிய திருமந்திரத்திலே

"ஆசை அறுமின்கண் ஆசை அறுமின்கண்
ஈசனோடாயினும் ஆசை அறுமின்கண்
ஆசைப்படப்பட ஆய்வருந்துன்பங்கள்
ஆசைவிடவிட ஆனந்தமாமே" -
எனக்கூறியுள்ளார்.

சாதுக்களெல்லாம் மலர்களைப் போன்றவர்கள். இறைஞானம் பெற விரும்புவோர் தேனீ யைப்போலே சாதுக்களாகிய மலர்களிலே ஞானமாகிய தேனைச் சிறிது சிறிதாகச் சேர்க்க வேண்டும். மலர்கள் வெவ்வேறு நிறம், மணம் உள்ளவைகளாக இருக்கலாம். சேர்க்கப்படுவது ஒரு தேனே. சாதுக்கள் வெவ்வேறான கருத்துக்களைக் கூறுவார்கள். அவைகளிலே தொக்கி நிற்கும் ஞானமாகிய அறிவைச் சேகரித்துக்கொள்வதே சாதகர்களின் முழுமுயற்சியாக இருக்க வேண்டும். இதைக் கூறியவர் கூட இந்தியாவின் மூலை முடக்கெல்லாம், ஏன் வெளிநாடுகளில் கூட பாகவதம் பற்றிய

நீண்ட சமய சொற்பொழிவுகளை மேற்கொண்டு பக்தி மார்க்கத்தைப் படித்தவர்க்கும் பாமர மக்களிடையேயும் பரப்பி வரும் பேராசிரியை பிரேமா பாண்டுரங்கன் எனும் ஒரு தலைசிறந்த உபன்நியாசினியேதான். பேச்சாளர் ஒருவர் அவையோரிடமிருந்தும் ஒன்றிரண்டு விஷயங்களைத் தானும் அறிந்து கொள்கிறார், சமயபோதனை என்பது எல்லா வேளைகளிலும் அவையோர் திசையில்தான் செல்லும் என்று எண்ணிவிடக்கூடாது என அந்த அம்மையார் சீரிய அடக்கத்தோடு அடியேனுக்கெழுதிய கடிதம் ஒன்றை நான் பேணிப்பாதுகாத்து வைத்திருக்கிறேன். (என்ன சந்தர்ப்பத்தில், எதற்காக அது எழுதப்பட்டது என்பதை இப்பகுதியில் பின்னொருதடவை குறிப்பிடுகிறேன்).

ஒருவனுக்கு ஒரு கூடை நிறைய மீன்களைக் கொடுப்பதிலும் பார்க்க அவனுக்கு ஒரு மீனைப்பிடிப்பது எப்படி எனக்கற்றுக்கொடுப்புது மேல் - என ஒரு சீனப்பழமொழி உண்டு. இதிலே உள்ள ஆழ்ந்த கருத்து யாதெனில் பொருட் கொடையிலும் பார்க்க அறிவுக் (ஞானக்) கொடையே சாலச்சிறந்தது என்பதாகும். கொடுக்கக் கொடுக்கக் குறையாத, வழங்க வழங்க வற்றாத செல்வம் கல்விச் செல்வம் ஒன்றே தான். அறிவு ஜீவிகளான நம் முன்னோர்கள் பின்வரும் நீதிவெண்பா ஒன்றிலே இதைத் தெளிவுபடக் கூறி வைத்துள்ளார்கள்.

வெள்ளத்தே போகாது வெந்தணலில் வேகாது வேந்தராலும்

கொள்ளத்தான் முடியாது **கொடுத்தாலும் நிறைவன்றிக் குறைவுறாது**

கள்ளர்க்கோ மிகஅரிது காவலோ மிகஎளிது கல்வி என்னும்

உள்ளத்தே பொருள் இருக்க ஊரெல்லாம் பொருள் தேடி அலைவதென்னே.

வேதங்களிலே கூறப்பட்டிருக்கும் சனாதன தர்மங்களை, வேதாந்த உண்மைகளை உலகமுழுவதும் பரப்பும் நோக்குடனே நூற்றுக்கணக்கான ஞான யக்யங்களை நடாத்தி அதிலே வெற்றியும் கண்டவர் குருநாதர் சுவாமி சின்மயானந்தா அவர்கள். அப்படியான ஞான யக்கங்களிலே பல தடவைகளில் இறைவனைப்பற்றி அவர் கூறிய இரு விடயங்களை நான் இங்கே கூற விரும்புகின்றேன்.

ஆற்ற முடியா அல்லல்களுற்று அவஸ்தைப் படும் போது "கடவுளுக்குக்கூட கண்ணில்லையா? நான் இப்படியெல்லாம் துன்பப் படுகிறேனே எனக்கு ஒரு வழிகாட்டாமல் இருக்கிறாரே" என்று கடவுளையே திட்டுவதை நம்மில் எத்தனையொ பேர் கேட்டிருக்கிறோம் பார்த்திருக்கிறோம். இப்படியான ஒரு பொது வினாவுக்குக் குருவானவர் எவரையும் சிந்திக்க வைக்கும் உவமானம் ஒன்றைக் கூறி நம்மைத்தெளிவு படுத்த முயற்சித்திருக்கிறார்.

நாம் பிரயாணத்துக்காக உபயோகிக்கும் மோட்டார் வாகனம் ஒரு அடியேனும் நகர்வதற்கு நாம் பாவிக்கும் எரிபொருள் தேவைப்படுகிறது. தேவைக்கேற்ப விரைவாகவோ அன்றி மெதுவாகவோ ஓட்டிச்செல்கிறோம். சிலவேளை நம் அஜாக்கிரதை காரணமாகவோ அல்லது இன்னொருவர் கவனக்குறைவினாலோ அல்லது சீதோஷ்ண காலநிலையாலோ விபத்து நடந்து விடுகிறது. சில சந்தர்ப்பங்களில் சாரதியோ பிரயாணிகளோ பரிதாபமாக இறக்கவும் நேரிடுகிறது. அந்த வேளைகளில் யாராவது வாகனம் ஓடுவதற்கு அத்தியாவசியமாக இருந்த அந்த எரிபொருள் மீது பழியைப்போட்டதுண்டா?. நம் உடல் இயங்குவதற்குக் கூட அந்த எரிபொருள் போல் இறைவன் அத்தியாவசியமாக இருக்கிறான். அதேவேளை நாம் விரும்பிய வேகத்தில் விரும்பிய திசையில் ஓட்ட நமக்குச் சுதந்திரமும் கொடுத்துள்ளான். இந்த அடிப்படையிலே நாம் இறைவனைப் புரிந்து கொள்வோமேயாகில் ஆண்டவன் மேல் பழி போடுவது அபத்தம் என்பதை நாம் அறிய முடியும்.

இதைவிட நம்மிடையே நாஸ்திகம் பேசும் ஒரு சிலருக்காக அவர்கள் ஆண்டவனைப் பற்றிக் கொண்டிருக்கும் அபிப்ராயத்திற்கும் வேதாந்திகள் கொண்டிருக்கும் அபிப்ராயத்திற்கும் உள்ள வேறுபாட்டை விளக்க இன்னொரு உவமானத்தையும் கூறி வந்துள்ளார். மின்சாரம் பாயும் போது மின் விசிறி சுழன்று நம்வெப்பத்தைக் குறைக்கிறது. மின்குமிழ் விளக்கு எரியும்போது ஒளியை வீசிப் பிரகாசமாக்குகிறது. இப்படியாக மின்சாரம் பாய்ந்து இயங்குகிற நிலையிலே ஒருநாள் மின் விசிறி மின்குமிழ் விளக்கைப் பார்த்துக் கூறியதாம் "ஏதோ மின்சாரம் அது இது என்று பேசிக் கொள்கிறார்களே அப்படி ஒன்று இருப்பதில் எனக்கு நம்பிக்கையே இல்லை" என்று. இதைப் போல்தானாம் ஒருவர் "எனக்குக் கடவுள் இருக்கிறார் என்பதில் நம்பிக்கை இல்லை" என்பதும். வேதாந்திகளின் கோட்பாட்டின் படி கடவுள் இருக்கிறார் அல்லது இல்லை என்று சொல்வதற்கே கடவுளின் சகாயம் தேவைப்படுகிறது. இந்த வகையிலே நாம் இறைவனைப் புரிந்து கொள்வோமேயானால் நாம் நாஸ்திகமே பேச மாட்டோம்.

வேதாந்த விளக்கப்படி நாம் ஒவ்வொருவரும் மூன்று அடுக்குச் சரீரங்களைக் கொண்டவர்களாக இருக்கிறோம். தூல சரீரம் (**GROSS BODY**) சூட்சும சரீரம் (**SUBTLE BODY**) காரண சரீரம் (**CAUSAL BODY**) என்பன தான் அவை. இந்தத் தூல சரீரத்தைப் பற்றி நம் சித்தர்களும் ஞானிகளும் தமிழிலே என்ன என்ன வெல்லாம் கூறி வைத்திருக்கிறார்களென்பதை அடுத்த பகுதியில் பார்ப்போம்.

தொடரும்...

# தவறுக்கு மன்னிப்பு கேட்ட தமிழ் எழுத்தாளர்

சி. ந. இராமகிருஷ்ணன் – தமிழ்நாடு



தேசத்தின் உயரிய விருதான ஞானபீடவிருதை தமிழ் எழுத்தாளரான ஜெயகாந்தனுக்கு அளித்து கௌரவித்திருக்கிறது இந்திய அரசு.

தமிழ் இலக்கிய உலகில் அகிலனுக்குப் பிறகு ஞானபீட விருது பெற்ற தமிழ் எழுத்தாளர் ஜெயகாந்தனே. இத்தனை பெருமைக்குரிய அவரை தமிழ் உணர்வாளர்களே வசைபாடிய சம்பவம் ஒன்று தமிழகத்திலேயே நடந்திருக்கிறது. கோவையில், விஜயா பதிப்பகம் அவருக்கு நடத்திய பாராட்டு விழாவின் போதுதான் தமிழ் உணர்வாளர்களின் கடுமையான எதிர்ப்பினை ஜெயகாந்தன் சந்திக்க நேரிட்டது.

'சில நேரங்களில் சில மனிதர்கள்' என்ற நாவலுக்காக தனது 37வது வயதிலேயே சாகித்ய அகாடமி விருது பெற்றவர் ஜெயகாந்தன். தன் மனதுக்குச் சரியென்றுபட்டதை துணிச்சலாகச் சொல்வது இவரது இயல்பு. இந்தத் துணிச்சலால்தான் இப்போது இவர் வம்பில் மாட்டியிருக்கிறார்.

சமீபத்தில் சென்னை சமஸ்கிருத சங்கம் ஜெயகாந்தனுக்காகப் பாராட்டு விழா ஒன்றை ஏற்பாடு செய்தது. அந்த விழாவில்தான் கொஞ்சம் உணர்ச்சிவசப்பட்டு ஜெயகாந்தன் இப்படிப் பேசினார்.

“ஏற்றத்தாழ்வுகள் இருந்தால் தான் வாழ்க்கை சுவாரஸ்யமாக இருக்கும். ஆதனால். சாதி வேறுபாடுகள் இருக்கத்தான் வேண்டும். தமிழை விட உயர்ந்தது சமஸ்கிருதம். பிறமொழி கலப்பில்லாமல் எழுத வேண்டும்: பேச வேண்டும் என்று சொல்லும் தமிழறிஞர்கள் தம்மைத்தானே நக்கிக் கொள்ளும் நாய்கள்.” என்று தமிழறிஞர்கள் சிலரை ஒரு பிடி பிடித்து விட்டார்.

இந்த பேச்சு போதாதா? தமிழ் உணர்வாளர்கள் பலரும் கொதித்துப் போனார்கள். ஜெயகாந்தனுக்குச் சரியான பாடம் புகட்ட வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தார்கள். இதற்கு ஒரு வாய்ப்பாக அமைந்தது ஜெயகாந்தனுக்காக கோவையில் விஜயா பதிப்பகம் நடத்திய பாராட்டு விழா.

அந்த விழா நடந்த அரங்கில் ஜெயகாந்தனை கடுமையாகத் தாக்கிய துண்டு பிரசுரங்களை வினியோகித்தார்கள் சில தமிழ் ஆதரவாளர்கள். அவரை எதிர்த்தும் கோஷமிட்டார்கள்.

இந்தத் தீவிர எதிர்ப்பால் கொஞ்சம் கலங்கித்தான் போனார் ஜெயகாந்தன். அடுத்து அவர் மேடையில் பேச ஆரம்பித்த போது "தமிழில் பேசாதே சமஸ்கிருதத்தில் பேசு" என்று ஒரே குரலில் கட்டளையிட்டார்கள் இந்தத் தமிழ் ஆதரவாளர்கள்.

நிலைமையைப் புரிந்து கொண்ட ஜெயகாந்தன்

"சென்னை சமஸ்கிருத சங்க விழாவில் நான் பேசிய விதம் யாரையாவது புண்படுத்தியிருந்தால் அதற்காக நான் மன்னிப்பு கேட்டுக் கொள்கிறேன். என்னுடைய கருத்து என்னவென்றால் தமிழுடன் சேர்ந்து இந்தி, சமஸ்கிருதம் போன்ற மொழிகளையும் கற்க வேண்டும் என்பதுதான். ஆங்கில மொழியில் எழுதப்பட்ட பெயர்ப்பலகைகளை தார் பூசி அழிப்பதால் எல்லாம் தமிழ் வளர்ந்து விடாது. தமிழை வளர்க்க விரும்புபவர்கள் இத்தகைய செயலில் ஈடுபடமாட்டார்கள். நான் தமிழன்தான். தமிழில் தான் பேசுகிறேன். எதிர்ப்பு தெரிவிப்பது தமிழ் மக்களுக்கே உள்ள தனிப்பட்ட குணம். அதைத்தான் இங்குள்ளவர்கள் செய்கிறார்கள். இதற்காக நான் வருந்தப் போவதில்லை." என்று உருக்கமாகவே பேசினார்.

'நா காக்க' என்று திருக்குறளில் இதனைத்தான்
நச்சென்று சொல்லியிருக்கிறார் திருவள்ளுவர்!

தமிழக வானில்

சி. ந. இராமகிருஷ்ணன் – தமிழ்நாடு

# குழந்தைகளை உயிரோடு புதைக்கும் கோவில் விழா



அயோத்தியில் பாபர் மசூதியை இடித்ததற்காக ஒரு தேசத்தின் அமைதிக்கே பங்கம் ஏற்படுத்தும் விதமாக, ஏதாவது ஒரு தீவிரவாதச் செயலைச் செய்தபடியே இருக்கிறார்கள் இந்துக்களை எதிரிகளாகப் பார்க்கிற சில வன்முறையாளர்கள். இந்த ஜூலை மாத தொடக்கத்திலும்கூட, அயோத்தியில் ராமர் கோயிலை சேதப்படுத்த வந்த சில தீவிரவாதிகள் சுட்டுக் கொல்லப்பட்டார்கள். இறையாண்மை மீது முழு நம்பிக்கை வைத்திருக்கும் இந்தியாவில் மதத்தின் பெயரால் இது போன்ற குற்றங்கள் அவ்வப்போது தலைதூக்குவது வேதனை என்றால், பக்தியின் பெயரால் சில கிராமங்கள் கோவில் விழாக்களில் கடைப்பிடித்து வரும் வசித்திர பழக்கவழக்கங்கள் சர்ச்சையைக் கிளப்பி வருவது சோதனைதான்.

மதுரை அருகே பேரையூர் என்ற கிராமத்தில் சில ஆண்டுகளுக்கு முன் குழிமாற்றுத் திருவிழா என்றொரு விழா நடந்தது. அந்த கிராமத்தின் முத்தாலம்மன் கோவில் விழாவில் 'நேர்த்திக் கடன்' என்ற பெயரில் அதிர்ச்சிகரமான ஒரு செயலைச் செய்தார்கள் பக்தர்கள். காலம் காலமாக அவர்கள் காட்டி வந்த பக்தி இதுதான்

ஏதோ ஒரு நோயின் தாக்குதலில் தங்கள் குழந்தைகள் உயிரோடு போராடிக் கொண்டிருக்கும் போது, "முத்தாலம்மா... உன்கோயில்ல நடக்கிற குழித்திருவிழாவுல என்புள்ளைய உயிரோடு குழியில போட்டு உனக்கு நேர்த்திக்கடன் செலுத்தறேன். இப்ப என்புள்ளையக் காப்பத்திக் கொடும்மா..." என்று வேண்டிக் கொள்வார்கள். நோய் நீங்கி குழந்தைகள் பிழைத்ததும், குழிமாற்றுத் திருவிழாக்காக காத்திருப்பார்கள். விழா நடக்கும் நாட்களில் தங்கள் குழந்தைகளை விரதம் இருக்கச் செய்து, உடலைத் துணியால் சுற்றி, ஏற்கனவே தோண்டப்பட்டிருக்கும் குழிக்குள் போட்டு மண்ணை மூடிவிடுவார்கள். ஓரிரு நிமிடங்களுக்குள் அந்த மண்ணை விலக்கி குழந்தைகளை வெளியில் எடுப்பார்கள். இந்த நேர்த்திக் கடன் மூலம் அவர்கள் தெய்வத்தின் முன் பணிந்து சொல்வது என்னவென்றால்,

"சாகக்கிடந்த என் குழந்தையை நீ காப்பாற்றினாய். அதற்கு நன்றிக் கடனாக உன் கோயிலுக்கு முன்னால என்புள்ளையைப் புதைத்து எடுத்திருக்கிறேன். என் குழந்தைக்கு நீ கொடுத்த உயிர் பிச்சை இது" என்பதுதான்.

குழிக்குள் குழந்தைகளைப் போட்டு மண்ணை மூடி, பிறகு திரும்ப எடுக்கிற இந்தத் திருவிழாவைத் தடைசெய்ய வேண்டும் என்று இந்திய உச்சநீதிமன்றமே இந்த விஷயத்தில் அப்போது தலையிட்டது. அதனைத் தொடர்ந்து தமிழக அரசும்,

இந்த விழாவை எங்கும் நடத்தக்கூடாது என்று கடுமையாக உத்திரவிட்டது. ஆனாலும்கூட, சட்டம் போட்டெல்லாம் பக்தியைத் தடுத்துவிட முடியாது என்கிற ரீதியில் இப்போதும் இந்த குழிமாற்றுத் திருவிழா வெவ்வேறு வடிவங்களில் தமிழக கிராமங்களில் நடந்தபடியேதான் இருக்கிறது. காவல்துறையும் மக்கள் மீது வழக்கு போட்ட படியேதான் இருக்கிறது.

எதற்கும் அசராத கிராம மக்களோ கோவில்களை மருத்துவமனைகளாகவும் சாமிசிலைகளை மருத்துவர்களாகவும்தான் எப்போதும் போல் இப்போதும் பாவிக்கிறார்கள்.

மத நம்பிக்கைகளை அத்தனை சுலபத்தில் மாற்ற முடியுமா என்ன?

ஆன்மீகம்

திருமதி தனபாக்கியம் குணபாலசிங்கம் – லண்டன்

# சைவமும், தெய்வத் திருமேனி வழிபாடுகளும்

சைவமும், தமிழும் எங்கே? எப்பொழுது? உருவாகின என்பது ஆய்வுகளுக்கெல்லாம் அப்பாற் கால வரையரையற்றுக் கிடக்கின்றன. சில ஆய்வாளர்கள் சைவத்தினையும், தமிழையும் ஆதிநாகரிகங்கள் செழித்திருந்த சுமேரிய மொழியுடனும், கலாசாரத்துடனும் பல ஒற்றுமைகளைக் காட்டி ஆதாரங்களுடன், அங்குதான் சைவமும், தமிழும் தோன்றியிருந்தன என வலியுறுத்தியுள்ளனர். எனினும் எம்மைப் பொறுத்தவரை சைவமும், தமிழும் பற்றித் தெளிவான சான்றுகளைக் கொண்டுள்ள இந்துவெளி நாகரிக (மொகஞ்சதாரோ-ஹராப்பா) கலாசாரக் காலத்துடன் நின்று, இதன் பழமையைக் கண்டுணர்வது அறிவுபூர்வ -மானதாகத் தெரிகின்றது. ஏனெனில், சைவர்களின் உருவ அருவுருவ அருவ வழிபாட்டு நிலைகளை நாம் இங்குதான் சான்றாதாரங்களுடன் அறிய முடிகின்றது. அதனோடு தமிழ் எழுத்துக்களுக்கு முன்னோடியாகக் குறியீட்டு வடிவங்கள் தோன்றியிருந்த நிலையையும், வடமேற்கிந்தியாவில் வாழும் பழங்குடிமக்கள் இன்னமும் பேசுகின்ற பிராஹுய் மொழி தமிழ் மொழியின் இயல்புகளைக் கொண்டு விளங்குவதனாலும், இந்து வெளி நாகரிகமே சைவத்தினையும், தமிழையும் வளர்த்திருந்த நாகரிகமென ஆய்வாளர்கள் அறிவுறுத்தியுள்ளனர். இதனை இருக்கு வேதத்தில் இடம்பெறுகின்ற குறிப்புகளும் அரண் செய்கின்றன. எனினும், வரலாற்றுத் தகவல்களைப் புரிந்துகொள்ள முடியாத வடஇந்தியர்கள் இக்கருத்தினை ஏற்பதில்லை. ஆனால், உலகம் ஏற்றிருக்கிறது. கனடாவிலுள்ள நயாகரா நீர்வீழ்ச்சிக்குள் செல்லும் நுழைவாயிலில் நான்கு பழைய மொழிகளுள் "நல்வரவு" எனும் வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது. இவற்றுள் தமிழும் ஒன்று என்பதனால், தமிழின் பழமையை உலகம் மதித்துள்ளமை புலனாகும். இந்திய அரசுகளுக்கு இந்த உண்மை பலகாலமாகத் தெரிந்திருந்தும் அறிவீனத்தால் புறக்கணிப்பு செய்வது வழமையாக இருந்தது. எனினும் தமிழகத்தைச் சேர்ந்த விஞ்ஞானி அப்துல்கலாம் இந்திய குடியரசின் தலைவராக இன்று இருக்கும் பின்னணியில், திருமதி. சோனியா காந்தியினால் முன்னெடுத்துச் செல்லப்படும். காங்கிரஸ் அரசுடன் திராவிட முன்னேற்றக் கழகம் இணைந்து செயற்பட்டதனால் பாரதியார் வாழ்த்திய "வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி வாழிய வாழியவே" என்ற வாழ்த்துப் பலிதமாகியதனை நாம் கண்டு களிக்க முடிகின்றது. அதாவது 18ம் நாள் புரட்டாதி மாதம் 2004 (ஆங்கிலத் திகதி) அன்று இந்திய அரசு தமிழை "செம்மொழி"யாக (Classical Language) அறிவித்து இதன் பழம் பெருமைகளைக் கௌரவித்த தோடு, உலகளாவிய அளவில் பல்கலைக்கழகங்களில் தமிழ் தனித்துவமாக வளர வாய்ப்பும் அளித்துள்ளது.

**உருவத்திருமேனி**

இனி உலகின் சமயங்களெல்லாம் இறை அனுபவத்தின் வெளிப்பாடுகளே. அந்த அனுபவத்தைப் பெற்றவர்கள் பிறரும் அனுபவிக்க வேண்டும் என உணர்ந்து கூறினார்கள். அதனாலே பல சமயங்கள் உருவாகி, மக்களை வழிநடத்தலாயின. ஆயினும் ஒரு சமயத்தை ஒவ்வொருவரும் அனுபவத்தால் உணர்ந்தாலன்றி, பிறர் அனுபவத்தை வைத்துக்கொண்டு கண்மூடித்தனமாக அதனைப் பின்பற்றுவதில் பயனில்லை. கடவுள் ஒருவர் இருப்பின் அவரை நாமும் காணவேண்டும் என்று எதிர்பார்ப்பது இயல்பானதே. இவ்வாறு முயன்றவர்கள் கடவுளைத் தாமும் அனுபவித்துப், பிறரும் அனுபவத்தால் காணலாம் என அறிவுறுத்தியுள்ளார்கள். இவ்வாறு கடவுளை அனுபவித்துச் சமயங்களை உருவாக்கியவர்கள் "அவர் எப்படியிருப்பார்" என்பதனை எமக்கு விபரித்தார்களில்லை. ஏனெனில், இவர்கள் சுட்டிறந்த, வரையறைக்கப்பாற்பட்ட கடவுளின் இருப்பையே உணர்ந்தவர்கள் ஆவர். அதனாலே "கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்" என்றொரு பழமொழியும் தமிழில் உருவாகலாயிற்று. ஆனால் ஒரு பெயரோ அல்லது ஒரு உருவோ இல்லாத கடவுளைப், பெயரும், உருவும் பெறவைத்தவர்கள் நமது நாயன்மார்கள் ஆவர். இவர்களுள் மணிவாசகப்பெருமான் பிரபஞ்சத்துடனும், தம்முடன் இணைபிரியாதிருந்து வழிநடத்தும் இறைவன் பக்தர்களுக்கு குணம், குறிகளுடன் கீழிறங்கி வரும் நிலையில், அவரைப்பல்வேறு வடிவங்களில் தாம் கண்டனுபவித்தவற்றை

"வேறுவேறு உருவும் வேறுவேறு இயற்கையும்

